# வேண்டும்! வேண்டும்! ரஸ்னா டிரிங்க்மேன்







வந்துவிட்டது நண்பர்களே!

ஒரு **ரஸ்னு**

டிரிங்க்மேன் வாட்டர் பாட்டில் இலவசமாகப் பெறலாம், மூன்று 32 பேக்குகள் * ரஸ்னா ஸாஃப்ட் டிரிங்க் கான்சென்ட்ரேட் வாங்கும்போது.

* விசேஷ வாட்டர் பாட்டில் பேக்குகளின் மேல் மட்டும் இச்சலுகை உரித்தாகும். இச்சலுகை இல்லாத ரஸ்னா பேக்குகளும் கிடைக்கின்றன.

''வேண்டும் வேண்டும் குளிர்ச்சி வேண்டும்
வேண்டும் வேண்டும் குடிக்க குளிர்ச்சி எப்போதும் வேண்டும்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் வேண்டும்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் ஸ்ட்ராவுடன்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் என்னுடன்
வேண்டும் வேண்டும் விடுதலை வேண்டும்''

குளிர்ச்சியால் ஒன்று குடிக்கலாம் எங்கேயும், எந்த நேரத்திலும். உடனே உங்கள் அருகிலுள்ள டீலரை அணுகவும். துடிப்பான தலைமுறையுடன் இணையவும்.






# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## குழந்தைகளின் பாதுகாப்பு

சிறுவர், சிறுமிகளைத் தொழிற் கூடங்களில் அவர்களது பெற்றோர் தம் ஏழைமையின் காரணமாகப் பணம் சம்பாதித்துக் கொடுப்பார்கள் என்று தொழிற் கூடங்களுக்கு அனுப்பி விடுவார்கள். அண்மையில் உலகக் கணக்கின் படி சுமார் ஏழரைக் கோடி சிறார்கள் தொழிற் கூடங்களில் வேலை செய் கிறார்கள்.

இந்தப் போக்கைத் தடுத்து நிறுத்தி விட வேண்டு மென்று ஜுன் மாதம் ஜெனிவாவில் கூடிய 180 நாடுகள் தீர்மானித்துள்ளன. இந்தியத் தொழிலதிபர்கள் இதுபற்றி யோசித்து சிறார்களைப் படிப்புத் துறைக்குத் திருப்பவும் குடும்ப வருமானத்தை அதிகரிக்க அக்குடும்பப் பெண்களின் ஊதியத்தை உயர்த்தவும் முன் வந்துள்ளது மகிழ்வூட்டுவதே ஆகும். இதனால் சிறுவர், சிறுமியர் பணம் சம்பாதித்து வர தொழிற் கூடங்களுக்கு அனுப்பப் படாமல் பள்ளிக் கூடங்களுக்கு அனுப்பப்பட்டு பயன் பெறுவார்களென உறுதியாக நம்பலாம்!

**மதிமுகம்: 99** **செப்டம்பர் 1996** **புன்னகை: 3**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



# மீண்டும் பெண் பிரதமரே

நம் அண்டை நாடான பங்களாதேஷின் முதல் பெண் பிரதம மந்திரியாக பேகம் கலீதா ஜியா 1991லிருந்து 1996 வரை இருந்தார். இந்த ஆண்டு பிப்ரவரியில் நடந்த தேர்தலில் அவர் மீண்டும் பிரதம மந்திரி ஆனார். ஆனால் அந்தக் தேர்தலை எதிர்க் கட்சிகள் பகிஷ்கரித்ததால் அவர் ராஜீநாமா செய்ய, ஜுன் 12ல் மீண்டும் தேர்தல் நடைபெற்றது. ஷேக் ஹஸீனா தலைமையில் கூட்டாட்சி அரசாங்கம் ஏற்பட்டது. ஷேக் ஹஸீனா வாஜித் பங்களா தேஷின் பிரதம மந்திரி ஆனார்.



பங்களாதேஷின் 'தந்தை' எனக் கருதப்பட்ட ஷேக் முஜபுர் ரஹ்மானின் மூத்த மகள் ஷேக் ஹஸீனா. முஜபுர் ரஹ்மான் அவாமி லீகின் தலைமை தாங்கி கிழக்குப் பாகிஸ்தானின் விடுதலைக்காகப் போராடினார். இஸ்லாமாபாதைத் தலைநகராகக் கொண்ட மேற்குப்பாகிஸ்தான் இதை எதிர்க்கவே உள் நாட்டுப் போர் மூண்டது. பல்லாயிரக் கணக்கில் பங்களாதேஷ்வாசிகள் நம் நாட்டிற்கு அகதிகளாக வந்தனர். அவர்களைத் திருப்பி அனுப்ப நம் நாடு பாகிஸ்தானின் உள் விவகாரத்தில் தலையிட வேண்டியதாயிற்று. 1971ல் நடந்த இந்திய - பாக் போருக்குப் பிறகு கிழக்குப் பாகிஸ்தான் சுதந்திர நாடாகி பங்களா தேஷ் என்று பெயர் பெற்றது.

முஜ்புர் ரஹ்மான் 1972ல் பங்களாதேஷின் அதிபரானார். தலைநகர் டாக்காவில் 1975 ஆகஸ்ட் 15ல் முஜ்புர் ரஹ்மான் குடும்பத்தோடு கொலை செய்யப்பட்டார். அப்போது அவரது மூத்த மகள் ஹஸீனா ஜெர்மனியில் இருந்ததால் உயிர் தப்பினார்.

1977ல் மீண்டும் பங்களாதேஷில் கிளர்ச்சி ஏற்பட்டு ஜெனரல் ஜியா உர் ரஹ்மான் நாட்டின் அதிபரானார். இவர் 1981ல் கொலை செய்யப்பட்டார். 1982ல் நடந்த கலகத்தில் லெப்டினெண்ட் ஜெனரல் ஹுசேன் மகம்மது எர்ஷாத் அதிபராகி ராணுவ ஆட்சியை அறிவித்தார். 1986ல் ராணுவ ஆட்சி நீக்கப்பட்டு தேர்தல் நடைபெற்றது. எர்ஷாதின் தேசியக் கட்சி வென்றது. ஆனால் அந்த வெற்றி சர்ச்சைக்கு இடமாகியது. ஆயினும் அவர் 1991 வரை பதவியில் இருந்தார். 1991ல் நடந்த தேர்தலில் ஜியாஉர் ரஹ்மானின் விதவை மனைவி பேகம் கலிதாவின் நேஷனலிஸ்ட் கட்சி வெற்றி பெறவே அவர் பங்களாதேஷின் முதலாவது பெண் பிரதம மந்திரி ஆனார். ஜெனரல் எர்ஷாத் லஞ்சம் பெற்ற குற்றத்திற்காக சிறையில் அடைக்கப்பட்டார்.

முஜ்புர் ரஹ்மானின் புதல்வி ஷேக் ஹஸீனா 1981ல் தம் தாய் நாட்டிற்கு வந்து அவாமி லீகின் தலைமைப் பொறுப்பை ஏற்றார். பங்களாதேஷ் நாடாளு மன்றத்தில் அக்கட்சி எதிர்க்கட்சியாக இருந்தது.

ஜுன் 12ல் நடந்த தேர்தலில் அவாமிலீக் 146 இடங்களைப் பெற்றது. பங்களாதேஷ் நேஷனலிஸ்ட் கட்சிக்கு 116 இடங்களே கிடைத்தன. 300 உறுப்பினர்கள் கொண்ட நாடாளுமன்றத்தில் தனக்குப் பெரும்பான்மை இல்லாததால் அவாமி லீக் மற்ற கட்சிகளோடு சேர்ந்து கூட்டாட்சி அமைத்தது. ஜெனரல் எர்ஷாத் சிறையில் இருந்து கொண்டே புதிய அரசிற்குத் தம் ஆதரவை அளித்தார். ஷேக் ஹஸீனா 25 அமைச்சர்கள் கொண்ட அமைச்சரவையை அமைந்தார். இவ்வாறு அவர் நாட்டின் இரண்டாவது பிரதம மந்திரியாக ஆனார். அவர் பதவி ஏற்றதும் "இது கூட்டாட்சி என்றாலும் நாட்டின் எல்லாப் பிரச்னைகளுக்கும் எல்லாக் கட்சிகளுடனும் கலந்து ஆலோசித்தே முடிவு எடுப்போம்" எனக் கூறினார்.



# மனைவி அமைவதெல்லாம்

சிறு வயதிலேயே தன் தாய் தந்தையரை இழந்து விட்ட கருணாகரனை அவனது பாட்டிதான் அந்த கிராமத்தில் வளர்த்து வந்தாள். அவனும் வளர்ந்து நன்கு படித்து பட்டணத்தில் கிடைத்த வேலையை ஏற்றுக் கொண்டு அங்கு சென்றான். அவனது பாட்டியோ தான் பிறந்த கிராமத்தை விட்டு விட்டுப் பட்டணத்திற்கு வர முடியாது என்று கூறி விட்டாள். அவளை கவனித்துக் கொள்ளும்படி அதே ஊரிலுள்ள தன் அக்காவிடம் கருணாகரன் கூறி விட்டுத்தான் பட்டணத்திற்கு போனான்.

நான்கு வருடங்கள் கழிந்தன. ஒரு நாள் கருணாகரனுக்கு கிராமத்திலிருந்து அவனது பாட்டியின் உடல் நிலை மிகவும் மோசமாகி விட்டதாகத் தகவல் வந்தது. கருணாகரனும் உடனே தன் கிராமத்திற்குச் சென்றான்.

அவனைக் கண்டதும் அவனது பாட்டி ''கருணா! வந்து விட்டாயா? உனக்கு ஒரு கல்யாணம் செய்து வைத்து விட்டால் நான் நிம்மதியாக உயிர் விடுவேன்'' என்றாள். கருணாகரன் தனக்கு வரப் போகும் மனைவி பற்றிக் கற்பனை செய்து வைத்திருந்தான். பட்டணத்துப் பெண்களைப் போல உடை உடுத்துப் பேசி நாசூக்காக நடப்பவளாகத் தன் மனைவி இருக்க வேண்டும் என ஆசைப்பட்டான்.

பாட்டி கல்யாணப் பேச்சை எடுத்ததும் கருணாகரனும் ''ஆகா. செய்து கொள்கிறேன். முதலில் உன் உடல் நிலை சரியாகட்டும்'' என்றான். பாட்டியோ ''என் உடம்பு இப்படியேதான் இரண்டு வருடங்களாக இருக்கிறது. உனக்கு நானே ஒரு பெண்ணைப் பார்த்து வைத்திருக்கிறேன். நாளையே நல்ல முகூர்த்த நாள். நீ அவளை மணந்து கொண்டு விடு'' என்றாள்.

—சிவனார் செல்வன்—

கருணாகரன் தயங்கினான். பிறகு அரை மனதாக அத்திருமணத்திற்கு இணங்கினான். மறுநாளே அவனுக்கும் செல்லம்மாவுக்கும் கல்யாணம் நடந்தும் விட்டது.

இரண்டு நாட்களுக்குப் பிறகு கருணாகரன் தன் மனைவி செல்லம்மாவுடன் பட்டணத்திற்குக் கிளம்பத் தயாரானான். அப்போது பாட்டி அவர்களிடம் ''உங்கள் திருமணம் நடந்தால் நம் குல தெய்வமான வெள்ளனூர் வெங்கடாசலபதிக்கு அபிஷேகம் செய்து பட்டாடை சாத்துவதாக வேண்டிக் கொண்டிருக்கிறேன். அந்தப் பிரார்த்தனையை நிறைவேற்றுங்கள்'' எனக் கூறி அனுப்பினாள்.

பட்டணம் போகும் வழியிலேயே கருணாகரன் செல்லம்மாளிடம் ''நீ பட்டிக்காட்டுப் பெண். ஒன்றும் தெரியாதவள். பட்டணப் பெண்களைப் பார்த்து எல்லாம் கற்றுக் கொள்'' என்று அறிவுரை கூறினான்.

செல்லம்மாளும் அவன் கூறிய படியே நடப்பதாகக் கூறினாள். பட்டணம் போனதும் தன் நடை உடை பாவனைகளையும் அவள் பட்டணத்துப் பெண்களைப் போல மாற்றிக் கொண்டாள்.

இப்படியாக ஒரு மாதம் கழிந்தது. ஒருநாள் செல்லம்மா தன் கணவனிடம் ''பாட்டியின் பிரார்த்தனையை நிறைவேற்ற நாம் வெள்ளனூர் கோவிலுக்கு போக வேண்டாமா?'' என்று நினைவு மூட்டினாள். கருணாகரனோ ''உம். இப்போது முடியாது. என் அதிகாரி வெங்கட்ராமன் எனக்கு லீவு கொடுக்க மாட்டார். இப்போதே நான் அதிக நாட்கள் லீவு எடுத்துக் கொண்டு



விட்டதாக எச்சரித்திருக்கிறார்'' என்றான்.

அப்போது செல்லம்மா ''உங்கள் மேலதிகாரியின் பெயர் வெங்கட்ராமன் என்றுதானே சொன்னீர்கள்? அப்படியானால் அவரது குலதெய்வமும் வெங்கடாசலபதியாகத்தான் இருக்கும். எனவே நீங்கள் நம் குல தெய்வம் வெங்கடாசலபதி என்றும் அவருக்குப் பிரார்த்தனை செலுத்த வேண்டும் என்று கூறி லீவு கேளுங்கள். கண்டிப்பாக கொடுத்து விடுவார்'' என்றாள்.

கருணாகரனும் ''எனக்கு நம்பிக்கை இல்லை. ஆனாலும் நீ சொன்னதைக்கூறி லீவு கேட்டுப் பார்க்கிறேன்'' என்றான். அவன் அலுவலகத்தில் தன் மேலதிகாரியான வெங்கட்ராமனிடம் தன் குல தெய்வமான



வெங்கடாசலபதிக்குப் பிரார்த்தனை செலுத்த இரண்டு நாட்கள் லீவு வேண்டுமென்று கேட்டான். அவரும் ''அடடே! உன் குல தெய்வமும் வெங்கடாசலபதியா? பிரார்த்தனை என்றால் அதைச் சட்டெனச் செலுத்த வேண்டும். லீவு கொடுக்கிறேன். போய்ப் பிரார்த்தனையைச் செலுத்து'' என்று கூறி இரண்டு நாள் லீவும் கொடுத்து விட்டார்.

தன் மனைவி கூறியபடி நடந்ததும் லீவு கிடைத்தது கண்டு ஆச்சரியப் பட்டவாறே அவன் வீட்டிற்கு வந்து ''லீவு கிடைத்து விட்டது. நாம் வெள்ளனூர் போகலாம்'' என்றான். இருவரும் வெள்ளனூருக்குச் சென்றனர். அப்போது செல்லம்மாளிடம் கருணாகரன் ''அக்கா கொடுத்த தங்க வளையல்களை பெட்டியில் துணிகளுக்கு அடியில் வை. அக்கா சொன்னபடி வெள்ளனூர் வெள்ளையன் தங்க மாளிகையில் அவற்றைக் கொடுத்து புதிதாக வாங்கி வரலாம்'' என்றான். அவளும் அவ் வளையல்களை அவன் கூறியபடியே பெட்டியில் வைத்து எடுத்துச் சென்றாள்.

வெள்ளனூரில் பொது மக்கள் தங்க இருந்தது ஒரே சத்திரம்தான். அங்கு போய் கருணாகரன் தங்குவதற்கு ஒரு அறை வாடகைக்கு கேட்டான். சத்திர நிர்வாகி ஒரு அறை கூடக் காலி இல்லை எனவே செல்லம்மா ''பிறகு ஏன் பழனியப்ப உடையார் நம்மிடம் 'நான் கட்டிப் போட்டிருக்கும் சத்திரத்தில் நீங்கள் எப்போது போனாலும் இடம் கிடைக்கும்' என்று சொன்னார்?'' என்று சத்திர நிர்வாகி கேட்கும்படி உரக்கக் கூறினாள். அப்போது அந்த நிர்வாகி ''ஓ! நீங்கள் உடையார் அவர்களுக்கு மிகவும் வேண்டியவர்களா? இதை முதலிலேயே சொல்லியிருக்கலாமே. சற்று முன்தான் ஒரு அறை காலி ஆயிற்று. அதில் நீங்கள் தங்குங்கள்'' என்று கூறி அவர்களை அந்த அறையில் கொண்டு போய் விட்டுச் சென்றார்.

அந்த நிர்வாகி சென்றதும் கருணாகரன் ''உனக்கு பழனியப்ப உடையாரைத் தெரியுமா?'' என்று செல்லம்மாவிடம் கேட்டான். அவளும் ''எனக்கு தெரியாது. ஆனால் சத்திரத்தில் நாட்டப்பட்டிருந்த அடிக் கல்லில் 'இது பழனியப்ப உடையாரால் தம் தந்தையின் நினைவில் கட்டப்பட்ட சத்திரம்' என்றிருந்தது. எனவே அவரை அறிந்தவள் போலப் பேசி நிர்வாகியிடமிருந்து இந்த அறை

யைப் பெற முடிந்தது'' என்றாள். கருணாகரன் அவளது சமயோசித புத்தியைத்தன் மனதிற்குள் பாராட்டிக் கொண்டான்.

இருவரும் குளித்து விட்டு அங்கிருந்து வெங்கடாசலபதி கோவிலுக்குப் போனார்கள். அப்போது அர்ச்சகர் கோவில் கதவை மூடப் போய்க் கொண்டே ''பூஜை வேளை முடிந்து விட்டது. இனிமேல் மாலை ஐந்து மணிக்குத்தான் கதவு திறக்கப்படும்'' என்றார். அப்போது செல்லம்மா ''அடடா! நம் பாட்டி பிரார்த்தனையைச் செலுத்திய பின் இந்த விலையுயர்ந்த காணிக்கையை அர்ச்சகரின் தட்டில் போடச்சொன்னாளே. அர்ச்சகரின் அதிர்ஷ்டம் அவ்வளவுதான் போலிருக்கிறது. இதை நாம் பொது உண்டியில் போட்டு விட்டு இப்போதே ஊருக்குகிளம்பலாம்'' என்று கூறியவாறே ஒரு பொட்டலத்தை எடுத்தாள். உடனேஅர்ச்சகர் ''வாருங்கள். பிரார்த்தனையைச் செலுத்துங்கள்'' என்று கூறி சுவாமிக்கு அபிஷேகம் செய்து அவர்கள் கொடுத்த பட்டாடையைச் சாத்தி தீபாராதனை காட்டினார். செல்லம்மாளும் தீபாராதனைதட்டில் ஒரு ரூபாயோடு அந்தப் பொட்டலத்தையும் போட்டாள். இருவரும் கோவிலுக்கு வெளியே வந்தனர்.

அப்போது கருணாகரனும் ''உன்னால் பாட்டியின் பிரார்த்தனை நிறைவேறியது. அந்தப் பொட்டலத்தில் அப்படி விலையுயர்ந்த பொருள் என்ன இருந்தது?'' என்று கேட்டான். செல்லம்மாளும் ''ஒன்றுமில்லை. பத்து பைசா கற்பூரம்தான் இருந்தது''



என்று கூறிச் சிரித்தாள்.

கருணாகரனும் ''பேஷ். பேஷ். அதோ பார். வெள்ளையன் தங்க மாளிகை. நீ சத்திரத்திற்குப் போய்த் தங்க வளையலை எடுத்து வா. நான் அந்தக் கடையில் இருக்கிறேன்'' என்று கூறி செல்லம்மாவை சத்திரத்திற்கு அனுப்பினான். அவள் அங்கு தன் அறைக்குப் போய் பெட்டியைத் திறந்த போது ஒரு இளைஞன் அங்கு வந்து ''நான் வெள்ளையன் தங்க மாளிகையில் வேலை செய்பவன். ஐயா தங்க வளையல்களை வாங்கி வரச்சொல்லி என்னைஅனுப்பினார். வளையல்களைக் கொடுங்கள்'' என்றான்.

செல்லம்மாவும் ''வளையலை மட்டுமா? தங்கக் காசு மாலையைக் கொண்டு வரச் சொல்லவில்லை? நீ

போய்சரியாகக்கேட்டுவா'' என்றாள். அந்த இளைஞனும் போய்விட்டுச் சற்று நேரத்திற்குப் பின் வந்து ''ஆமாம். வளையல்களோடு அதையும் வாங்கி வரச் சொன்னார்'' என்றான்.

செல்லம்மாவும் ''திருட்டுப் பயலே! என் கணவர் என்னிடம் கூறியதைத்தெருவில்கேட்டுவிட்டு இங்கு வந்து என்னை ஏமாற்றப் பார்க்கிறாயா?'' என்று கூச்சல் போட்டாள். அந்த இளைஞன் பயந்து போய் ஓடியே போய் விட்டான். நடந்ததை எல்லாம் கேட்ட கருணாகரன் அவளை பாராட்டினான்.

கருணாகரனும் செல்லம்மாளும் தம் ஊரை அடைந்து தம் வீட்டிற்குப் போன போது தம் வீட்டு வாசல் கதவின்பூட்டு உடைக்கப்பட்டும் யாரோ உள்ளே இருப்பதையும் கண்டனர். கருணாகரன் 'திருடன்' எனக் கத்த முயன்ற போது செல்லம்மாள் அவன் வாயைப் பொத்தி சும்மா இருக்கும் படிக்கூறினாள். பிறகு அவள் கதவைத் தட்டி ''ஐயா! நாங்கள் வெளியூர்க்காரர்கள். இப்போது இரவாகி விட்டது. எங்களிடம் நிறையப் பணமும் நகைகளும் உள்ளன. யாராவது பிடுங்கிக் கொள்வார்களோ என்று பயமாக இருக்கிறது. இன்றிரவு உங்கள் வீட்டில் தங்க இடம் கொடுங்கள்'' என்றாள்.

வீட்டிற்குள் இருந்தவனும் கதவைத் திறந்து 'உள்ளே வாருங்கள்' எனவே செல்லம்மா ஒரு பையை அவனிடம் கொடுத்து ''இதில் என் நகைகளும் பணமும் இருக்கின்றன. பத்திரமாக வைத்திருங்கள். நாளைக் காலை நாங்கள் போகும்போது வாங்கிக் கொள்கிறோம்'' என்றாள். அந்த மனிதனும் அதை வாங்கிக் கொண்டு ஒரு அறைக்குள் சென்றான். அப்போது செல்லம்மா சட்டென அந்த அறையின் கதவை மூடி வெளிப்புறம் பூட்டிவிட்டுத் தன் கணவனிடம் ''நீங்கள் போய் காவல் வீரர்களை அழைத்து வாருங்கள். இந்தத் திருடனை அவர்களிடம் ஒப்படைக்கலாம்'' என்றாள்.

கருணாகரனும் ''உன்னை பட்டிக்காடு, ஒன்றும் தெரியாதவள் என்றெல்லாம் கூறினேன். நீ மிகவும் புத்திசாலி'' என்று கூறிப் பாராட்டி விட்டு காவல் நிலையத்திற்கு ஓடினான்!





# எதை விரும்புவோம்?

பசுபதிபுரம் ஒரு சிவஸ்தலம். அங்கு அழகான கோவிலும் கண்ணைக் கவரும் பூங்காவும் இருந்தன. இசைக்கும் நடனத்திற்கும் அவ்வூர் பெயர் பெற்றது. இதற்கான அரங்குகள் இருந்தன. பல புத்தகங்கள் கொண்ட நூல் நிலயம் ஒன்றும் அவ்வூரில் இருந்தது.

கோடை விடுமுறையைக் கழிக்க கோபாலன் அவ்வூரிலுள்ள தன் பெரியப்பாவின் வீட்டிற்கு வந்தான். அந்தப் பெரியப்பாவிற்கு மாதவன், கோவிந்தன், கண்ணன், ஸ்ரீதரன் என்று நான்கு மகன்கள் இருந்தனர். இவர்களில் மூத்தவனான மாதவன் கோபாலனின் வயதினன். இந்த நான்கு சகோதரர்களும் கோபாலனின் வருகையால் மகிழ்ந்து அவனுக்கு ஊரின் பல இடங்களைச் சுற்றிக் காண்பித்தார்கள்.

கோபாலனும் அவர்களிடம் ''உங்கள் ஊர் நன்றாக இருக்கிறது. பல நாட்கள் இருந்து பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் போலிருக்கிறது'' என்றான். அது கேட்டு அந்த நான்கு சகோதரர்களும் மிகவும் மகிழ்ந்து போனார்கள். அதனால் அவர்கள் கோபாலனிடம் அந்த ஊரில் அவனுக்கு எது மிகவும் பிடித்த இடம் என்று திரும்பத் திரும்பக் கேட்டார்கள்.

கோபாலனும் ''நமக்கு எந்த இடம் மிகவும் பிடித்திருக்கிறதோ அங்கு தான் நீண்ட காலம் இருக்க விரும்புகிறோம். உண்மையில் நமக்குப் பிடித்தமான இடம் எது என்று கூறுவது கூட எளிதாக இராது. நீங்கள் நால்வரும் நான்கு நாட்கள் உங்களுக்குப் பிடித்தமான இடங்களில் இருந்து விட்டு வாருங்கள். பிறகு உங்களுக்கு எந்த இடம் மிகவும் பிடித்தது என்று நீங்கள் கூறினால் நான் என் விருப்பத்தைக் கூறுகிறேன்'' என்றான்.

அவர்களும் கோபாலன் கூறிய படியே நான்கு நாட்கள் பல இடங்களில் இருந்து விட்டு வந்தார்கள்.

—கி. அருணா—

அவர்களுக்குத் தமக்குப் பிடித்தமான இடங்களில் அதிக நேரத்தைக் கழித் தார்கள்.

அவர்கள் கூறியதை எல்லாம் கேட்ட கோபாலன் ''நீங்களே பார்த் தீர்களே! உங்களுக்கு எல்லா இடங் களும் பிடித்திருக்கிறது. இது உங்கள் பரந்த மனப்பான்மையைக் காட்டு கிறது'' என்றான். இது அச்சகோதரர் களுக்குக் கொஞ்சமும் ஏற்றதாக இருக்கவில்லை. அவர்கள் ''நீயும் நான்கு நாட்கள் பல இடங்களுக்கும் போயிருந்தாயா? எந்த இடத்தில் நீ அதிக நேரம் இருந்தாய்? அதைச் சொல்'' என்று கேட்டார்கள்.

கோபாலன் ''நம் ஊரில் நம் எல் லோருக்கும் பிடித்த இடம் ஒன்று தான். அதைச் சொல்லவும் வேண் டுமா?'' என்றான். அதைக் கேட்டு நால்வரும் திகைத்து போனார்கள். அவன் கோவிலைக் குறிப்பிடுகி றானாபூங்காவைக்குறிப்பிடுகிறானா நடன அரங்கைக் குறிப்பிடுகிறானா அல்லது நூல் நிலயத்தைக் குறிப்பிடு கிறானா என்று எண்ணிக் குழம்பினர்.

கோபாலன்சிரித்தவாறே ''நீங்கள் இப்படிப்பட்ட அழகான இடங்கள் உலகில் பசுபதி புரத்தில்தான் இருக்கி றது என நினைத்துக் கொண்டிருக் கிறீர்களா? இது போன்ற இடங்கள் காசி, மதுரை போன்ற பல ஊர்களி லும் உள்ளன. அந்த ஊர்களும் அழகானவை. அவ்வூர்களிலும் பல அழகிய இடங்கள் இருக்கத்தான் இருக்கின்றன. அங்கெல்லாம் நான் போகாமல் இந்த ஊருக்கு ஏன் வந் தேன் என்று உங்களுக்குத் தெரியுமா? உங்களோடு அன்புடன் பழகி இந்த வீட்டில் இருக் கத்தான் வந்திருக்கி றேன். எனக்கு மிகவும் விருப்பமான இடம் இந்த வீடு தான். இந்த ஊரில் பெரியப்பா, பெரியம்மா, நீங்கள் நால் வர் ஆகிய எல்லோரிடமிருந்தும் நான் அடையும் அன்பும் பாசமும் இந்த வீட்டைத் தவிர வேறு எந்த இடத்தில் அடைய முடியும்? எங்கு போனாலும் நம் வீட்டிற்குத் தானே நாம் திரும்பி வருகிறோம். இங்கு நமக்குக் கிடைக் கும் சுகம் வேறு எங்கும் கிடைக்காது. எனவே இந்த ஊரில் எனக்கும் உங் களுக்கும் மிகவும் பிடித்தமான இடம் இந்த வீடுதான்'' என்றான். அதை அந்த நான்கு சகோதரர்களும் சரியானதே எனக் கூறி ஏற்றுக் கொண்டார்கள்.






## 14

(ரூபதரனின் மகன் தீரமதி தன் தந்தையைப் பற்றிய தகவல் தெரிந்து கொள்ள பைலாஸ் போய்விட்டு திரும்பும் போது தன் எதிரிகளிடம் அகப்படாமல் தன் பன்றிகளை மேய்ப்பவனின் வீட்டை அடைந்தான். அங்கு அவன் தன் தந்தையைச் சந்தித்தான். தந்தையும் மகனும் தம் வீட்டில் கூடிய எதிரிகளை ஒழிக்கத் திட்டம் போட்டார்கள். அதன்படி தீரமதி செயல்படலானான். பிறகு–)

சூரியோதயம் ஆனதும் தீரமதி எழுந்து நகருக்குச் செல்லத் தயாரானான். அவன் பன்றி மேய்ப்பவனிடம் ''நான் வீட்டிற்குப் போய் என் தாயைப் பார்க்கிறேன். அவள் என்னை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். இந்தக் கிழவனுக்கு ஊர் சுற்றியே பழக்கம் போலிருக்கிறது. அதனால் நகருக்கு அழைத்து வந்து தெருக்களில் சுற்ற விடு. பசித்தால் அவன் பிச்சை எடுத்துத் தன் வயிறை நிரப்பிக் கொள்வான்'' என்றான்.

ரூபதரனும் ''ஆமாமப்பா! என்னை இங்கே இருக்கச் சொன்னாலும் நான் இங்கே இருக்க மாட்டேன். பிச்சை எடுப்பவனுக்கு வீடு, வாசல் என்பது கிடையாது. நீ இப்போது போ. நான் பனி விலகி வெயில் வந்ததும் இவரோடு நகருக்குப் போவேன். என் துணிகளைப் பார். ஒரேகந்தல். இவை குளிரைத் தடுக்காது. எனவே நன்கு வெயில் வந்ததும் இங்கிருந்து கிளம்புவேன்'' என்றான்.



தீரமதியும் மிக வேகமாகக் கிளம்பினான். அவன் தன் வீட்டில் கூடிய எதிரிகளை தன் தந்தையோடு சேர்ந்து எப்படி எதிர்ப்பது என்று யோசித்துக் கொண்டே சென்றான். அவன் தன் வீட்டிற்குள் நுழைந்ததும் தன் கையிலிருந்த ஈட்டியை ஒரு தூண் மீது சார்த்தி வைத்தான். அவனைக் கண்டதும் வீட்டின் பணியாளர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். பத்மமுகி அவனைக் கண்டதும் மாடியிலிருந்து இறங்கி ஓடி வந்தாள்.

அவள் தன் மகனைக் கட்டித் தழுவிக் கொண்டு ''மகனே! வந்து விட்டாயா? மறுபடியும் உன்னைப் பார்க்கப் போகிறேனா என்று கவலைப் பட்டுக்கொண்டிருந்தேன். உன் தந்தையைப் பற்றிய விவரம் அறிய என்னிடம் கூட சொல்லிக் கொள்ளாமல் பைலாஸ் போய் வந்திருக்கிறாயே. என்ன தகவல் கொண்டு வந்திருக்கிறாய்?'' என்று ஆவலுடன் கேட்டாள்.

தீரமதியும் ''அம்மா! பல ஆபத்துகளில் தப்பி நான் போய் வந்தாலும் இப்போது கண்ணீர் விட்டுக் கொண்டிருக்க இது நேரமல்ல. நீ நன்கு குளித்து நம் குலதேவதையிடம் நம் எதிரிகளை முறியடிக்கும் சக்தியை நமக்கு அளிக்க வேண்டிக் கொள். நான் ஊருக்குள் போய் பைலாஸிலிருந்து அழைத்து வந்துள்ள ஒரு பிரமுகரை இங்கு அழைத்து வர வேண்டும்'' என்றான்.

அந்தப் பிரமுகர் சிறந்த அறிவாளி. பைலாஸிலிந்து தீரமதி கப்பலில் கிளம்பும் போது அவர் தானும் அவனோடு வருவதாகக் கூறி கப்பலில் ஏறிக் கொண்டார். தீரமதி இதாகாவில் வேறு துறையில் இறங்கிய பின் அவர் மற்றவர்களோடு கப்பல் வழக்கமாகப் போகும் துறைக்குப் போய் இறங்கி நகரை அடைந்தார்.

தீரமதி கூறியபடியே பத்மமுகி குளித்து விட்டு தூய ஆடைகளை அணிந்து தன் குல தேவதையிடம் தன் எதிரிகளை அழிக்கச் சக்தி கொடுக்கும்படி வேண்டினாள். இதற்குள் தீரமதி தன் ஈட்டியை எடுத்துக் கொண்டு வீட்டிலிருந்து கிளம்பி தன் இரு வேட்டை நாய்களுடன் கம்பீரமாக ஊருக்குள் சென்றான். அப்போது அவன் வீட்டில் சேர்ந்த கயவர்கள் அவனைக் கண்டு நலம் விசாரித்தார்கள். ஆனால் அவர்கள் உள்ளூர அவனிடம் வெறுப்பே கொண்டிருந்தார்கள்.

தீரமதியும் அவர்களுக்குத் தக்க பதிலைக் கூறிவிட்டு தன் தந்தையின்

நண்பர்கள் கூடும் இடத்திற்குப் போனான். அவர்கள் அவனிடம் பல கேள்விகளைக் கேட்டுத் தகவல் அறிந்து கொண்டார்கள். சற்று நேரத்தில் தீரமதியுடன் கப்பலில் வந்த அறிவாளியைச்சிலர் அங்கு அழைத்து வந்தார்கள். அவரும் ''பிரதாபன் உனக்களித்த விலையுயர்ந்த பரிசுகளை உன் வீட்டில் வைத்துக் கொள்'' என்றார்.

அதற்கு தீரமதி ''என் வீட்டில் சேர்ந்துள்ள கயவர்கள் இப்போதுள்ள என் வீட்டுப் பொருள்களைப் பங்கு போட்டுக் கொள்ளத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது இவற்றை என் வீட்டிற்குக் கொண்டு போனால் இவை கூட அவர்களுக்கே போய் விடும். எனவே அவற்றை இப்போது என் நண்பர் ஒருவரின் வீட்டில் கொண்டு போய் வைக்கிறேன். நிலைமை சரியானதும் அவற்றை என் வீட்டிற்கு எடுத்துச் செல்வேன்'' என்றான்.

பிறகு அவன் அந்த அறிவாளியைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அவரை நன்கு உபசரித்து உணவளித்தான். அப்போது பத்மமுகி அவருக்கு எதிரில் அமர்ந்து கொண்டாள். அவர்கள் சாப்பிட்டபின் அவன் தீரமதியிடம் ''மகனே! உன் தந்தை பற்றிய விவரங்களை அந்த துஷ்டர்கள் இங்கு வருவதற்கு முன் கூறிவிடு'' என்றாள்.

தீரமதியும் ''சொல்கிறேன். நான் பைலாஸிற்குப் போய் நவத்யோதனைக் கண்டேன். அவரும் அவரது மகனும் என்னை அன்புடன் வரவேற்றார்கள். ஆனால் அவர்களுக்கு என் தந்தையைப் பற்றி எதுவும் தெரியவில்லை. அவர் என்னுடன் தன்



மகனை ஒரு வண்டியில் பிரதாபனின் நாட்டிற்கு அனுப்பினார். அவரும் நான் வந்த காரணத்தைத் தெரிந்து கொண்டு நம் வீட்டில் கூடி கொட்டமடிக்கும் கயவர்களை உதைத்து விரட்ட வேண்டும் என்றார். யாரோ ஒரு கிழவன் தன் தந்தையை உயிருடன் ஏதோ ஒரு தீவில் பார்த்ததாக அவரிடம் கூறினானாம். அதைக் கேட்ட பிறகு அங்கிருந்து நான் திரும்பி வந்து விட்டேன்'' என்றான்.

அதைக் கேட்ட அறிவாளியும் பத்மமுகியிடம் ''பெண்ணே! உண்மையை நான் கூறுகிறேன். கேள். இப்போது உன் கணவன் இந்த நாட்டிற்குத் திரும்பி வந்துவிட்டான். உன் வீட்டில் நடக்கும் அட்டூழியங்களை எல்லாம் அவன் அறிவான். உன் கணவனின் கையாலேயே இந்தக் கயவர்களெல்

லாம் அழிவார்கள் என்று என் மனம் உறுதியாக நம்புகிறது'' என்றான்.

பத்மமுகியும் ''உங்கள் வாக்கு அப்படியே பலிக்கட்டும். நீங்கள் என்ன கேட்டாலும் இதற்குக் காணிக்கையாகக் கொடுக்கிறேன்'' என்றாள். இவர்கள் மூவரும் இவ்வாறு வீட்டிற்குள் பேசிக்கொண்டிருக்கையில் வீட்டிற்கு வெளியே வழக்கமாக அங்கு கூடும் துஷ்டர்களின் கூட்டம் வந்தது. அவர்கள் வெகு நேரம் வரை ஈட்டி, அம்புகளை எய்து பலவிதப் பயிற்சிகளைச் செய்து கொண்டிருந்தார்கள். உணவு வேளை வந்ததும் ஒரு பணியாள் வந்து உணவு தயார் என்று கூறவே எல்லோரும் ஓடிப் போய் ஆசனங்களில் அமர்ந்து பரிமாறப்பட்ட உணவை உண்ணலானார்கள்.

பன்றி மேய்ப்பவனின் குடிசையிலிருந்த ரூபதரன் சூரியோதயமாகி வெயில் வந்த போது ''நான் நகரத்திற்குப் போக வேண்டுமே'' எனவே பன்றி மேய்ப்பவனும் ''ஆம். உன்னை நான் எஜமானியிடமும் அழைத்துச் செல்ல வேண்டும். கிளம்பு'' என்றான். கிழவனாக இருந்த ரூபதரனும் தன் பையை எடுத்துத் தோளில் மாட்டிக் கொண்டான். பிறகு தடியை ஊன்றிக் கொண்டு பன்றி மேய்ப்பவனின் பின்னால் தள்ளாடியவாறே சென்றான். அவனைப் பார்த்தால் ஒரு பிச்சைக்காரனைப் போல இருந்தது. அவர்கள் சற்று தூரம் போனதும் ஆடு மாடுகளை ஓட்டிக் கொண்டு காலன் என்பவன் எதிரே வந்து கொண்டிருந்தான்.

அவன் பிச்சைக்காரனைப் போல இருக்கும் ரூபதரனைப் பார்த்து ''யார் இந்தப் பிச்சைக்காரக் கிழப்பயல்? இவனை எங்கே பிடித்தாய்? இவன் எல்லோரிடமும் பிச்சை கேட்டுத் தொந்திரவு கொடுப்பானே! இவனை நீ ரூபதரனின் வீட்டிற்கா அழைத்துச் செல்கிறாய்? அங்குள்ளவர்கள்



இவனைப் பந்தாடி விடுவார்கள்'' என்று பன்றி மேய்ப்பவனிடம் கூறினான்.

ரூபதரனுக்கு கோபம் வந்து விட்டது. அவன் காலனை உதைத்து உருட்டிப்புரட்டி எடுக்க நினைத்தான். ஆனால் அப்போது எதற்கு வீண் தகராறு என்று எண்ணித் தன் கோபத்தை அடக்கிக் கொண்டான். பன்றி மேய்ப்பவனோ ''காலா! உனக்கு ரொம்பவும் கொழுப்பேறி விட்டதா? இரு. இரு. எஜமானியம்மாவிடம் சொல்லி உன் கொட்டத்தை அடக்குகிறேன்'' என்றான்.



காலனோ ''எஜமானியம்மாளால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. எஜமானர் இருந்தால் பயப்படுவேன். அவர்தான் செத்துப் போய் விட்டாரே. இந்த தீரமதியும் போய் விட்டால் நல்லது. கடவுளாக அவனை அழைத்துக் கொள்ளாவிட்டால் கூட அவன் வீட்டில் கூடியுள்ள அரச குமாரர்கள் அவனைக் கொன்று விடுவார்கள்'' என்றான்.

அவன் ரூபதரனின் வீட்டு ஆடு, மாடுகளை மேய்ப்பவனே. அப்போது ஆடுகளை அரசகுமாரர்கள் வெட்டிச் சமைத்து சாப்பிடவே ஓட்டிப் போய்க் கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் பன்றி மேய்ப்பவனும் ரூபதரனும் சென்றனர். ரூபதரன் தன் வீட்டை அடைந்ததும் அதனைப் பார்த்து விட்டு ''இதுதானே ரூபதரனின் வீடு? அப்படியாகத்தான் இருக்குமென்று நினைத்தேன். உள்ளே சாப்பாடு தயாராகி விட்டது போலத் தெரிகிறதே. 'கம்'மென்று வாசனை வந்து கொண்டிருக்கிறதே'' என்றான்.

பன்றி மேய்ப்பவனும் ''ஆமாம். வாசனை வரத்தான் வருகிறது. ஆனால் அது பற்றி இப்போது பேசவே வேண்டாம். நாம் என்ன செய்ய வேண்டும் என்று யோசிப்போம். முதலில் நீ உள்ளே போகப் போகிறாயா? அல்லது நான் போய்விட்டு வரட்டுமா? நீ எதுவும் செய்யாமல் இங்கே நின்று கொண்டிருந்தால் உன்னைத் துரத்தி விடுவார்கள்'' என்றான்.

அவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையில் அவ்வீட்டு மூலையில் படுத்திருந்த ஒரு கிழ நாய் ரூபதரனைப் பார்த்தது. அது தன் காதுகளை நிமிர்த்தி வாலை ஆட்டியது. அது உயர்ஜாதி வேட்டை நாய். அதன் பெயர் 'சாந்தி'. ரூபதரன் அதனைக் குட்டியாக இருந்த போதே எடுத்து

வந்து வளர்த்து வந்தான். ஆனால் அது நன்கு வளர்ந்து பெரிதாவதற்குள் அவன் போரில் கலந்து கொள்ளக் கிளம்பிப் போய் விட்டான்.

அவன் போருக்குச் சென்றபின் அந்த நாயை கவனிப்பார் யாருமே இல்லை. அது கிழடு தட்டிப் போய் இப்போது எழுந்து நடமாடக் கூட முடியாமல் அந்த வீட்டில் ஒரு மூலையில் படுத்துக் கிடந்தது. ரூபதரனைக் கண்டதும் அது மகிழ்ந்து போய் எழுந்து வர முயன்றது. ஆனால் அதனால் அவ்வாறு செய்ய முடியாமல் போனதால் அது தன் காதுகளை நிமிர்த்தி வாலை ஆட்டியது.

அவன் பன்றி மேய்ப்பவனிடம் அதைச்சுட்டிக்காட்டி, ''இதைப்பார்த்தால் உயர்ரக நாய் போல் தெரிகிறதே. இதை யாரும் கவனிப்பார் இல்லையா? ஒருவேளை இதனால் யாருக்கும் எவ்வித உபயோகமும் இல்லையோ?'' என்று கேட்டான்.

பன்றி மேய்ப்பவனும் ''நீ சொல்வது சரியே. இப்போது இதை கவனிப்பார் யாருமே இல்லைதான். இது கவனிப்பார் இல்லாமல் சாகப் போகிறது'' என்று கூறியவாறே அவ் வீட்டினுள் சென்றான்.

அந்த நாய் தன் எஜமானனைக் கண்ட மகிழ்ச்சியில் எழுந்து விழுந்து இறந்து விட்டது.

பன்றி மேய்ப்பவன் வீட்டினுள் வந்ததும் அவனைக் கண்டு தீரமதி தலையை ஆட்டினான். அவன் நேராகச்சென்று தீரமதிக்கு எதிரே உட்கார்ந்தான். இதற்குள் ரூபதரனும் தடியை ஊன்றியவாறே தள்ளாடி நடந்து அங்கே வந்தான். தீரமதி ஒரு ரொட்டித் துண்டை எடுத்து பன்றி மேய்ப்பவனிடம் கொடுத்து ''இதை அந்தக் கிழவனிடம் கொடு. அவனை மற்றவர்களிடமும் கை நீட்டச் சொல்ல'' என்றான்.

ரூபதரனும் பன்றி மேய்ப்பவனிடமிருந்து ரொட்டியையும் மாமிசத் துண்டத்தையும் பெற்றுக் கொண்டு ''ஐயாவைக் கடவுள் ஒரு குறையும் இல்லாமல் வைக்கட்டும். அவரது எண்ணமெல்லாம் நிறைவேறட்டும்'' என்று வாழ்த்தினான். பிறகு அவன் அவற்றைச் சாப்பிட்டு விட்டு அங்கிருந்த ஒவ்வொருவரிடமும் தனக்கு பிச்சை போடுமாறு கேட்கலானான்.

**(தொடரும்)**



# அம்புலிமாமா செய்திகள்

## எவரெஸ்ட் மீது ஏறி!...

உலகின் மிக உயரமான மலைச் சிகரமான எவரெஸ்ட் மீது ஏறப் பல கோஷ்டிகள் ஒவ்வொரு ஆண்டும் முயல்கின்றன. நேபாளத்திலுள்ள இந்த சிகரத்தின் மீது ஏற விரும்புவோர் முதலில் நேபாள அரசாங்கத்திற்கு 10,000 டாலர்கள் செலுத்தியாக வேண்டும். அதாவது மூன்றரை லட்சம் ரூபாய்! இந்த சீஸனில் மட்டும் 80 குழுக்கள் இதன் மீது ஏற முயன்றனர். 57 பேர்களே 8847 மீ உயரமுள்ள இந்த மலை உச்சியை அடைந்தனர். இவர்களில் டென்சிங்கின் பேரன் ஜாங்லிங் நார்கேயும் ஒருவர். இவரது வயது 31. இவருடன் இரண்டு திரைப்படத் தயாரிப்பாளர்களும் சென்றனர். இவர்கள் எவரெஸ்ட் மீது ஏறுவது இது மூன்றாவது தடவையாம். 1992ல் 58 பேர் எவரெஸ்ட் உச்சியை அடைந்தனர். இந்த ஆண்டு எவரெஸ்ட் சிகரம் ஏறுபவர்களிடமிருந்து நேபாள அரசிற்கு 64,000 டாலர்கள் வருமானம் கிடைத்துள்ளது. எவரெஸ்ட் உச்சிக்குப் போகும் வழிகளில் தாம் எடுத்துச் செல்லும் பொருள்களில் வீணாவதை வழியில் அங்கங்கேயே போட்டு விடுகிறார்கள். அவற்றை அப்புறப்படுத்த நேபாள அரசு ஏற்பாடு செய்திருப்பதோடு ஒவ்வொரு குழுவும் இன்ன வழியில்தான் செல்ல வேண்டும் எனத் திட்டமிட்டுக் கொடுக்கிறது. 2000 கி. கழிவுப் பொருள்களை இப்பாதைகளிலிருந்து நேபாள அரசு அகற்றியுள்ளது. இன்னமும் 15,000 கி. கழிவுப் பொருள்களை அது இப்பாதைகளிலிருந்து அகற்றியாக வேண்டுமாம்!

### பாட்டிலில் போன கடிதம்

தென் இங்கிலாந்தின் போக்னர் ரெஜிளிலுள்ள விக்கி தாமஸ் என்ற எட்டு வயதுச் சிறுமி ஒரு கடிதத்தை எழுதி அதை ஒரு பாட்டிலில் போட்டு அதன் வாயை இறுக மூடிக் கடலில் எறிந்தாள். அந்த பாட்டில் மிதந்தவாறே 16,000 கி.மீ. சென்று மேற்கு ஆஸ்திரேலியாவில் ஜெரால்டானிலுள்ள ஆண்ட்ரூ பிட்ஸ் என்ற இளைஞரின் கைக்குக் கிடைத்தது. அவரும் அதற்கு பதில் கடிதம் எழுதினார். இந்த பாட்டில் செய்த கடற்கரை பயணம் 'கின்னஸ் புக்'கில் இடம் பெறாமல் இருப்பது அதன் துரதிர்ஷ்டமே!

### வீடு திரும்பிய ஒட்டகம்

வளைகுடாப் போரில் 1991ல் ஏற்பட்ட குழப்பத்தில் குவெய்ட்டில் ஒரு பகுதியிலிருந்த சில ஒட்டகங்கள் பயந்து மூலைக்கு மூலை ஓடிப் போயின. அவற்றில் ஒரு ஒட்டகம் எங்கெங்கோ அலைந்து திரிந்து விட்டு தன் எஜமானனின் வீட்டிற்கே திரும்பி வந்து விட்டது. அது ஐந்து வருடங்கள் அலைந்து திரிந்த பிறகே தன் ஊருக்கு பத்திரமாயும் உடல் நலமாயும் வந்து சேர்ந்தது. அதைக் கண்டு அதன் எஜமானன் முகம்மது அலி அவ்யாசிர் தன் ஒட்டகத்தின் எஜமான விசுவாசம் கண்டு பூரித்துப் போய் ஒரு கவிதையே எழுதித் தள்ளி விட்டான்!



# அபூர்வராகம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் என்னி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நிசியில் ஏன் இப்படி விடாது முயல்கிறாய்? ஏதாவது அபூர்வ சக்தியை அடைந்து உன் எதிரிகளை வெல்ல வேண்டும் என்ற நோக்கத்துடனா அல்லது உலகில் சுகமாக இருக்க எதையாவது அடையும் எண்ணத்திலா? எவ்வளவுதான் முயன்று ஒன்றை அடைந்து விட்டாலும் அதை நீ கை நழுவ விட் மாட்டாய் என்பது என்ன நிச்சயம்? இதற்கு உதாரணமாக மாதவசர்மா என்பவனின் கதையைக் கூறுகிறேன் கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

மதனகிரி என்ற நாட்டின் ஒரு கிரா

## வேதாளம் சொல்லும் கதை



மத்தில் மாதவ சர்மா என்ற இளை ஞன் இருந்தான். அவன் இசைக்கலை ஞர்களின் குடும்பத்தில் பிறந்தவன். அவனது தந்தை வீணை வித்வான். அவனது தாத்தா புகழ் பெற்ற பாடகர். இப்படிப்பட்ட குடும்பத்தில் பிறந்த மாதவ சர்மாவுக்கு இசையில் நல்ல ஈடுபாடு இருந்தது. இளம் வயதில் அவன் தன் தாய் தந்தையரை இழந்து விட்டாலும் தன் வீட்டிலுள்ள ஓலைச் சுவடிகளை நன்கு படித்து நல்ல இசை ஞானத்தையும் அவன் பெற்று விட் டான்.

இந்த நிலையில் மதனகிரியின் ஆஸ்தான சங்கீத வித்வானின் பதவி காலியாகவே அப்பதவிக்குத் தக்கவ ரைத் தேர்ந்தெடுக்கப் போட்டி ஏற் பாடு செய்யப்பட்டது. அப்போட்டி யில் அதுவரை யாரும் பாடாத ராகத் தைப் பாடி சபையோரை மகிழ்விக் கும் இசைவாணரையே தன் ஆஸ்தான வித்வானாக நியமிக்கப் போவதாக அரசன் அறிவித்தான். அப்போட்டி யில் எந்த இசைக் கலைஞனும் தலை நகருக்கு வந்து கலந்து கொள்ளலாம் என்று அறிவிக்கப்பட்டது.

மாதவசர்மாவும் தன் திறமையைப் பலர் முன் வெளிப்படுத்த ஒரு அரிய வாய்ப்பு கிடைத்ததே என எண்ணி அப்போட்டியில் கலந்து கொள்ளத் தலைநகருக்குக் கிளம்பினான். வழி யில் ஒரு ஊரை உச்சிப் பொழுதிற்கு அடைந்தான். அவ்வூரில் ஒரு வீட்டில் அவனை வரவேற்று உணவு அளித்தார் கள். அந்த வீட்டுக்காரர் மிகவும் வய தானவர். எண்பது ஆண்டுகளைத் தாண்டியவர். அவரது பெயர் பசுபதி. அவருடைய பேத்தி அவருக்கு உதவி யாக அவரோடு இருந்தாள். அவள் விவாக வயதை அடைந்திருந்தாள்.

பசுபதி மாதவசர்மாவைப் பற்றி விசாரித்து ''ஓ! நீ இசைக் குடும்பத்தில் பிறந்தவனா? தலைநகரில் நடக்கும் போட்டியில் கலந்துக் கொள்ளப் போகிறாயா? நானும் ஒரு சங்கீத வித் வானே. எங்கே ஒரு பாட்டுப் பாடு'' என்றார். மாதவ சர்மாவும் ஒரு பாடலை தன் இனிய குரலில் பாடவே அதைக் கேட்டு பசுபதி மிகவும் மகிழ்ந்து அவனைப் பாராட்டினார்.

அதன்பிறகு அவர் '' நான் உன் தாத்தாவைப் பற்றிக் கேள்விப்பட்டி ருக்கிறேன். இசைத் துறையில் அவ ருக்கு இணை அவரேதான். வேறு யாரையும் சொல்ல முடியாது. இப் போது நீ பாடிய பாட்டு மிக மிக அற் புதம். ஆனால் இது அபூர்வ ராகம்

என்று கூற முடியாது. எனக்கு ஒரு அபூர்வ ராகம் தெரியும். அது பற்றிய கதையை உனக்குக் கூறுகிறேன்'' என்று அது பற்றிச் சொல்லலானார்.

''நான் குருகுல வாசம் செய்து கொண்டிருந்த போது ஒரு நாள் காய் கனி கிழங்குகளைச் சேகரித்து வரக் காட்டிற்குச் சென்றேன். அப்போது எங்கிருந்தோ ஒரு இனிய கானம் என் காதில் விழுந்தது. அந்த இசையின் ஒலி வந்த திசையில் நான் சென்றேன். என்னை அது ஒரு முனிவரின் புதல்வி யின் முன் கொண்டு போய் நிறுத்தி யது. அந்த ஆசிரமத்தில் அந்தப் பெண் மலர்களைக் கொண்டு மாலை தொடுத்தவாறே பாடிக் கொண்டிருந் தாள். என்னைக் கண்டதும் அவள் பாடுவதை நிறுத்தினாள்.

நான் அதற்கு முன் யாரும் அவ் வளவு இனிமையாகப் பாடியதைக் கேட்டதே இல்லை. நான் ஆசிரமத்தி லிருந்த முனிவரை வணங்கி எனக்கு அவரது மகள் பாடிய ராகத்தைக் கற் பிக்கும்படி வேண்டினேன். அவரும் எனக்கு கந்தர்வ கானத்தைப் பற்றி விளக்கிக் கூறி ''அப்பனே! நீ கேட்ட ராகம் அபூர்வமானது. இவ்வுலகின ருக்குக்கிட்டாதது. எனக்கு ஐந்து தலை முறைகளுக்கு முன் இருந்த என் வம் சப் பெரியவர் ஒருவர் கந்தமாதனப் பர்வத்திற்குத் தவம் செய்யச் சென்றார். ஒருநாள் அவர் தவம் செய்துக் கொண் டிருக்கையில் பிரக்ஞுபாலன் என்ற கந்தர்வன் ஓர் இனிய ராகத்தில் பாடிக் கொண்டு சென்று கொண்டிருந்தான். அவன் சற்று தூரத்திலுள்ள குளத்தில் இறங்குவதை என் முன்னோர் பார்த் தார். அவர் அந்த கந்தர்வனை அணுகி



''ஐயா ! இப்போது நீங்கள் பாடிய ராகம் தேவலோக ராகம் போல உள்ளது. அதை ஒருமுறை கேட்ட துமே அது எனக்கு மனப்பாடமாகி விட்டது. மிக்க நன்றி'' என்றார்.

அது கேட்டு கந்தர்வன் கோபமாக ''நீ நினைத்தது சரியே. ஆனால் நீ இந்த ராகத்தை வேறொருவருக்குக் கற்பித் தால் உடனே நீ அதை மறந்து விடு வாய்'' எனச் சபித்து விட்டு மறைந்து போனான். இந்த ராகம் எம் குடும்பத்த வரிடையே நிலைத்து இருந்து வரு கிறது.''

பசுபதி இதைக் கூறி ''அப்பனே! எனக்குத் தெரிந்த இந்த ராகத்தை நான் வேறு ஒருவருக்குக் கற்றுக் கொடுக்க முடியாது. இதைப் பாடிக் காட்டுப வனை அரசன் கண்டிப்பாக ஆஸ்தான வித்வானாகத் தேர்ந்தெடுப்பான்''



என்று கூறி அந்த ராகத்தைக் கொஞ்சம் பாடிக் காட்டினார். மாதவசர்மா அதைக் கேட்டு லயித்துப் போனான். அதுவரை அது போன்ற இன்னிசையை அவன் கேட்டதே இல்லை.

அவரிடம் ''ஐயா! இதைப் பாதியிலேயே நிறுத்தி விட்டீர்களே. இதை விஸ்தாரமாக ஆலாபனை செய்து ஸ்வரம் போட்டுப் பாடி முடியுங்கள். நான் கற்றுக் கொள்கிறேன்'' என்று வேண்டினான். அவரோ ''அவசரப் படாதே! இதை நான் உனக்குக் கற்றுக் கொடுத்தால் மறுகணமே இந்த ராகத்தை மறந்து விடுவேன். எனக்குள்ள ஒரே சொத்து இந்த இசைக் கலையே. என் இந்தப் பேத்திக்குத் தாய் தந்தையர் இல்லை. இவளை ஒருவனுக்கு மணம் செய்து வைத்து விட்டால் எனக்கு ஒரு கவலையும் இராது'' என்றார். அதுவரை அங்கே நின்று கொண்டிருந்த அந்த இளம் பெண் ஆசிரமத்திற்குள் சென்று விட்டாள்.

மாதவசர்மா தன் வீட்டிலுள்ள ஓலைச் சுவடிகளை எல்லாம் நன்கு பரிசீலித்துப் பார்த்தவன். அவற்றில் எதிலும் இந்த அபூர்வ ராகத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்க வில்லை. எனவே அவன் அந்த ராகத்தைக் கற்க ஆவல் கொண்டான். முனிவரும் அவனது ஆவலைத் தீர்க்கத் தீர்மானித்துத் தம் பேத்தியை அழைத்து தம்புரா எடுத்து வந்து அதை மீட்டும்படிக் கூறினார். அவளும் தம்புராவை மீட்டலானாள்.

அப்போது முனிவர் மாதவசர்மாவிடம் ''நான் சொன்னதை நினைவு வைத்துக் கொள். இந்த இசைதான் எனது ஒரே செல்வம் இதனை உனக்கு அளிக்கிறேன்'' என்று கூறி வீணையில் அந்த அபூர்வராகத்தை ஆலாபனை செய்து பாட்டை வாசித்து ஸ்வரம் போட்டுக் காட்டினார். மாதவசர்மாவும் அதை உன்னிப்பாகக் கேட்டு விட்டு அதைப் பாடிக் காட்டினான். அவன் அந்த அபூர்வ ராகத்தை நொடியில் கற்றுக் கொண்டு இனிமையாகப் பாடிக் காட்டியதை முனிவரும் அவரது பேத்தியும் பாராட்டினார்கள்.

அப்போது அந்த இளம்பெண் ''என் தாத்தா தனது ஒரே சொத்து இந்த இசையே எனத் தங்களிடம் திரும்பத் திரும்பக் கூறியது நீங்கள் இந்த அபூர்வ ராகத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் என்னை நீங்கள் மணந்து கொள்ள வேண்டும் என்ற நிபந்தனை விதித்தது போலத்தான். நீங்களும்

அதைப் புரிந்து கொண்டு விட்டீர்கள் என்று தெரிகிறது. ஆனால் உங்களுக்கு விருப்பம் இல்லை என்றால் என்னை நீங்கள் மணக்க வேண்டியதில்லை.'' என்றாள்.

மாதவசர்மாவோ ''என் அதிர்ஷ்டம் இந்த அபூர்வ ராகத்தோடு அழகிய பெண்ணும் கிடைப்பதாக இருக்கிறது. என்னை உன் தாத்தா கட்டாயப் படுத்தவில்லை. உனக்கு என்னை மணக்க விருப்பமா? நான் தலைநகரம் போகாமல் இப்போது கிடைப்பதோடு திருப்தி அடைவேன்'' என்றான். அவளும் புன்னகை புரிந்து தலையை ஆட்டினாள்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மாதவசர்மன் ஆஸ்தான வித்வானாக வேண்டும் என்ற நோக்கத்தோடு தானே தலைநகருக்கு கிளம்பினான்? ஆனால் வழியில் பசுபதியை கண்டு அபூர்வராகத்தைக் கற்றதோடு அவரது பேத்தியை மணந்து கொண்டானே. அவன் மனம் ஏன் திடீரென மாறியது? இக் கேள்விக்குச் சரியான விடை தெரிந்து நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''மாதவசர்மா இசைக் குடும்பத்தில் பிறந்தவன். அவனது முன்னோர்கள் யாரும் ஆஸ்தான வித்வானாக இருந்ததும் இல்லை. தமக்கு நற்பெயர் கிடைத்ததால் திருப்தி அடைந்து தம் வயல் வாசல்களிலிருந்து கிடைத்த வருமானத்தைக் கொண்டு சுகமாக வாழ்ந்தவர்கள். இசைக் கலைஞன் இசையில் நாட்டம் கொள்வான். அதனால் மாதவசர்மா அபூர்வ ராகத்தைப் பசுபதியிடமிருந்து கற்றபோது மன நிறைவு பெற்றான். அதனை அவன் வியாபாரப் பொருளாக்கி ஆஸ்தான வித்வான் என்ற பதவியை அடைய விரும்பவில்லை. எனவே தலைநகரில் போட்டியில் கலந்து கொள்ளப் போகாமலும், தன்னை விரும்பிய பசுபதியின் பேத்தியை மணந்து கொண்டும் இல்வாழ்க்கையை மேற்கொள்ளத் தீர்மானித்தான். இது ஒரு கலைஞனின் இயல்பு'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# முகத்தில் கரி!

பாலூர் பரமசிவம் வீடு வந்தவர்களை வரவேற்று எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் தங்க இடமளித்து வந்தார். ஆனால் யாரும் ஓரிரண்டு நாட்களுக்கு மேல்தங்கியது இல்லை. கூளையன் என்ற அவரது தூர உறவினன் மட்டும் வாரக் கணக்கில் 'முகாம்' போட்டு விட்டான்.

கூளையனுக்கு எல்லோரையும் சீண்டி வேடிக்கை பார்ப்பதில் ஒரு அலாதி ஆனந்தம். அதனால் பரமசிவத்தின் பேரன் குமார் ஒரு குதிரையின் படத்தை வரைந்து அவனிடம் காட்டியபோது அவன் ''இதுவா குதிரை? கழுதையை அல்லவா வரைந்திருக்கிறாய்?'' என்றான். அதைக் கேட்டு அங்கு கூடி இருந்த சிறுவர்கள் கைத் தட்டிச் சிரித்தார்கள்.

குமாருக்கு அவமானமாய்ப் போய் விட்டது. கூளையன் அத்துடன் நில்லாமல் ''நீ கழுதையை நினைத்துக் கொண்டு குதிரையின் படத்தை வரைய முயன்றிருக்கிறாய். அதனால் தான் முடிவில் கழுதையின் படம் வந்தது. இனிமேல் கழுதையின் படத்தை வரைய வேண்டும் என்றால் குதிரையை நினைத்துக் கொண்டு வரை'' என்றான். அதைக் கேட்டு சிறுவர்கள் மேலும் பலமாகச் சிரித்தார்கள்.

அப்போதும் தொடர்ந்து கூளையன் ''குமார்! இனிமேல் படம் வரைவ்தானால் என்னிடம் யோசனை கேட்டு விட்டு வரை. எதை நினைத்துக் கொண்டு வரைந்தால் நீ விரும்பும் படம் கிடைக்கும் என்று கூறுகிறேன்'' என்றான். இதற்கும் கூட இருந்த சிறு வர்கள் கைதட்டிப் பலமாகச் சிரித் தார்கள்.

குமாரும் சரி, அவனது பெற்றோரும் மற்ற உறவினர்களும் கூளையனின் இம்மாதிரி கேலிப் பேச்சுகளால் கோபம் கொண்டாலும் மரியாதையைக் காப்பாற்ற ஆத்திரத்தை அடக்

—எஸ். சங்கரராம்—

கிக் கொண்டார்கள். குமார், தான் வரைந்த குதிரைப் படத்தை எடுத்துக் கொண்டு போய் அடுத்த வீட்டில் வசிக்கும் ராகவனிடம் காட்டவே அவரும் ''பேஷ், குதிரையின் உரு வத்தை அப்படியே வரைந்திருக் கிறாயே. மிக நன்றாக இருக்கிறது'' என்று பாராட்டினார்.

அப்போது குமார் தன் வீட்டிற்கு வந்துள்ள கூளையன் கூறிய கேலிப் பேச்சுகளைக் கூறவே, ராகவனும் ''கவலைப்படாதே. நீ தினமும் வந்து என்னிடம் சித்திரம் வரையக் கற்றுக் கொள்'' என்றார். குமாரும் அவரிடம் சித்திரங்கள் வரையக் கற்று பல படங் களை வரைந்து கூளையனுக்குக் காட்டினான். அவனோ அவற்றைப் பார்த்து வழக்கம் போலக் கிண்டல் செய்து கொண்டே இருந்தான்.



சில நாட்களாயின. ராகவன் குமாரி டம் ''இப்போது உன் படங்களைப் பார்த்துக் கூளையன் என்ன சொல் கிறான்?'' என்று கேட்டான். குமாரும் ''இப்போதும் அவன் கேலிதான் செய் கிறான்'' என்றான். அப்போது ராக வன் ஒரு சித்திரம் வரைந்து குமாரிடம் கொடுத்து ''இதைக் கூளையனைத் தவிர மற்ற எல்லோரிடமும் காட்டு. அவர்களெல்லாம் என்ன சொல்கிறார் கள் என்று பார். அப்போது கூளை யனே இதனைப் பார்க்க உன்னிட மிருந்து வாங்கிப் பார்ப்பான். அதற் குப் பிறகு என்ன நடக்கிறது என்று பார்'' என்று சொல்லி அனுப்பினார். குமார் அதனைப் பார்த்தான். அது கூளையனின் உருவப் படமே. அவன் அதனை எடுத்துக் கொண்டு போய் முதலில் தன் தந்தையிடம் காட்டி னான். அவரோ 'இது பன்றி' என்றார். தாயிடம் அதனைக் காட்டியபோது 'சோம்பேறிக் கழுதை இது' என்றார். ஒரு வேலைக்காரனிடம் காட்டிய போது 'இது ஆடு, சொரணையற்ற எருமை மாடு' என்றான்.

எல்லோரிடமும் குமார் அப்படத் தைக் காட்டியபோதிலும் கூளையனி டம் மட்டும் காட்டவில்லை. எல்லோ ரும் மோசமாக வர்ணித்த படத்தை அவன் பார்க்க விரும்பினான். அத னால் அவன் குமாரிடம் ''நீ படத்தை எல்லோரிடமும் காட்டினாயே. என்னிடம் காட்டவில்லையே, அதைப் பார்த்து விட்டு அது என்ன என்று நான் கூறுகிறேன்'' என்றான். குமாரோ ''வேண்டாம். வழக்கம் போல நீங்கள் கேலியாக ஏதாவது சொல்வீர்கள்'' என்று கூறியும் கூளை

யன் குமாருடைய கையிலிருந்து படத்தை வாங்கிப் பார்த்தான்.

அது தன்னுடைய உருவப் படமாக இருந்தது. கண்டு திகைத்து நின்றான். அப்போதுதான் அவனுக்கு தன்னைப் பற்றி அவ்வீட்டிலுள்ளவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது தெரிந்தது. தான் எல்லோரையும் கேலியும் கிண்டலும் செய்து வந்ததால் எல்லோருக்கும் தன் மீது எவ்வாறு வெறுப்பு ஏற்பட்டுள்ளது என்பது தெரிந்து போயிற்று. அதை வேறு யாரும் செய்யவில்லை, அவனது நடத்தை தான் எல்லோருக்கும் எரிச்சலை மூட்டியது. குமார் எவ்வளவு நன்றாகப் படங்களை வரைந்து அவனிடம் காட்டினாலும் அவன் அவற்றை யெல்லாம் இகழ்ந்து கேலி தானே செய்து வந்தான்! இப்போது அந்த வீட்டில் இருந்தவர்களெல்லாம் கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் அவனைக் கேலி செய்திருக்கிறார்கள்.

கூளையன் அப்போதே தன் ஊருக்குக் கிளம்பி விட்டான். அவன் போனதும் பரமசிவம் தன் பேரனிடம் ''குமார்! பேஷ் இப்படி ஒரு படம் வரைந்து அந்தக் கூளையனின் வாய் அடைத்துப் போகும்படிச் செய்து விட்டாய்'' என்று பாராட்டினார்.

குமார் என்ன சொல்வது என்று திகைத்து நிற்கையில் ராகவன் அங்கு வந்தார். அவர் ''நம் குமாருக்குப் படங்கள் வரைவதில் மிகுந்த ஆர்வம் உள்ளது. இந்த ஆர்வத்தை உங்கள் உறவினன் கூளையன் தன் கேலிப் பேச்சுகளால் குலைத்துக் கொண்டிருந்தான். ஒருவன் ஒரு கலையை ஆர்வத்துடன் கற்க முயலும் போது அவன் முயற்சியில் முட்டுக்கட்டை போல் இந்த கூளையன் இந்தச் சிறுவனின் உற்சாகத்தையும் திறமையையும் கேலி செய்து கொண்டே இருந்தான். அவனது செய்கை எப்படிப்பட்டது என உணர்த்தவே நான் இப்படி ஒரு திட்டம் போட்டேன். நான் எதிர்பார்த்தபடியே நடந்தது. குமாரின் ஆர்வத்தை குலைக்க இனி கூளையன் இங்கே இல்லை. நாம் இச்சிறுவனுக்கு ஊக்கமளிப்போம். இவன் சிறந்த ஓவியனாக வருங் காலத்தில் திகழ்வான்'' என்றார்.

பரமசிவமும் அதனை ஏற்க குமாரும் பெரும் மகிழ்ச்சி அடைந்தான்.



*கடற்கரையோரப் பயணங்கள் - 10*

# கேரளம்


கருத்து: **மீராநாயர்**
ஓவியர்: **கோப குமார்**





பாரதநாட்டின் தென் கடற்கரைப் பகுதிப் பயணத்தில் கர்நாடகத்திற்குத் தெற்கே 550 கி.மீ. நீளத்திற்குக் கேரளத்தின் பசுமையான கடற்கரையைக் காண்கிறோம். தென்னைக்குப் பெயர் பெற்றது கேரளம். இதனை முன்னர் சேரளம் என்று அழைத்து வந்தனர். பரசுராமர் தம் கோடாலியால் கடலை கீறி இப்பகுதியை உண்டாக்கினார் என பரவலாகக் கருதப்படுகிறது. ஆனால் புவிஇயல் வல்லுனர்கள் எரிமலை வெடிப்பால் இப்பகுதி பாரத நாட்டில் ஏற்பட்டதாகக் கருதுகிறார்கள்.

கிருஸ்து பிறப்பதற்கு முன்பே எகிப்து அரேபியா, கிரீஸ், ரோம், அசிரியா போன்ற நாடுகள் இங்கு விளையும் மிளகிற்காக வியாபாரத் தொடர்பு கொண்டன - கானூர், தலைச்சேரி, கோழிக்கோடு பந்தாலாயனி, பேய்ப்பூர், கொய்லாண்டி முதலிய துறைமுகங்கள் இப்பகுதியில் இருந்தவை.

கானூர் மாவட்டத்தில் 210 மீ. உயரமுள்ள குன்று கடலுக்குள் 250 மீ பரவியுள்ளது. கடற்பயிற்சிப் பள்ளி இந்த எழிமலைக் குன்றில் நிறுவப்பட உள்ளது.

**எழிமலைக்கருகே கடற்பாறை**

இந்தியாவில் சர்க்கஸ் தொழில் கேரளத்தில்தான் ஆரம்பமாகியது. இந்தியாவின் பிரபல சர்க்கஸ் கம்பெனிகளின் பெரும் பாலானவை கானூர் - தலைச்சேரிப் பகுதியிலிருந்து வந்தவை. முதலாவது சர்க்கஸ் பயிற்சிக் கூடம் 1901ல் குன்ஹி ராமனால் நிறுவப்பட்டது. இவர் கேரளாவின் காலரிப்பயத்' என்ற போர்க்கலையில் தலை சிறந்தவர்.



தலைச்சேரிக்குத் தெற்கே யுள்ள மாஹி மத்திய ஆட்சிப் பகுதியான பாண்டிச்சேரிக்குள் அடங்கியது. முன்பு பய்யாழி எனப்பட்ட இந்த ஊர் பிரஞ்சு தளபதி பெர்ட்ரண்ட் பிரான் ஸ்வா மாஹிடி லாபோர்ட்டனேயின் நினைவில் மாஹி எனப் பெயரிடப்பட்டது. அவரால் கைப் பற்றப்பட்ட இது பிரஞ்சுக்காரர் வசம் இருந்து பின்னர் இந்தியாவிற்குக் கொடுக்கப்பட்டது.

இப்பகுதியில் பிரெஞ்சுக் குடி உரிமை பெற்ற பல இந்தியர் கள் உள்ளனர். இது போன்ற பிரெஞ்சுக் குடியேற்றப் பகுதிகளின் பிரதிநிதி ஒருவர் பிரான்ஸின் நாடாளும் மன்றத்தில் இடம் பெற்று வருகிறார்.

மாஹிக்குத் தெற்கேயுள்ள வடகரா ஒருவணிக மையம். மிளகும், தென்னைப் பொருள் களும் முக்கிய வணிகப் பொருள்கள். இது தச்சோளி ஓதெனன் என்ற மாவீரனின் பிறப்பிடம். இவ்வீரனின் தீரச் செயல்கள் வடக்கன் பாடல் களென நாட்டுப் புறப்பாடல் களாக இடம் பெற்றுள்ளன. வடகராவுக்கு அருகேயுள்ள ஒரு கோவிலில் இவ்வீரனின் நினைவில் ஆண்டு தோறும் ஒரு விழா கொண்டாடப்படுகிறது.



**கேரளாவின் போர்க்கலையான காலரிப்பயத்து**

**கோழி கூவக் கேட்கும் கோழிக்கோடுப் பகுதி**

மேலும் தெற்கே சென்றால் வரலாற்றுப் புகழ் பெற்ற பந்தாலயனியை அடைகிறோம். இங்கு ஏழாவது நூற்றாண்டு மசூதி ஒன்று உள்ளது. இது மெக்கா மசூதியைப் போல அமைந்துள்ளதால் இவ் வழியாகச் செல்லும் அராபியக் கப்பல்கள் சற்று நின்று இம்மசூதியை வணங்கி விட்டுச் செல்கின்றன.

இக்கடற்கரையில் இம்மசூதிக்கருகே ஒரு காலடிச் சுவடு உள்ளது. இது இவ்வழியாக இலங்கைக்குச் சென்ற ஆதாமின் காலடிச் சுவடு என இப்பகுதி மக்கள் கருதுகிறார்கள்.

இதற்கும் தெற்கே கள்ளிக் கோட்டை எனப்பட்ட கோழிக்கோடு உள்ளது. 9வது நூற்றாண்டில் இதன் மன்னனாக இருந்த சேரமான் பெருமாள் என்பவன் தன் நாட்டைத் தன் படைத்தளபதிகளுக்குப் பிரித்துக் கொடுத்து விட்டு மெக்காவிற்குப் போய் விட்டான். அப் படைத் தளபதிகளில் ஒருவர் தாம் ஜாமோரின். இவருக்கு தாலியிலுள்ள கோவிலின் மீது ஒரு கோழி கூவ, அது கேட்கப்பட்ட நிலப் பரப்பு கிடைத்ததாம். அதனால் இப் பகுதிக்கு கோழிக் கோடு என்ற பெயர் ஏற்பட்டதாம்.

'ஜாமோரின்' என்ற பரம்பரைப் பட்டப் பெயர் 'சாமுத்திரி' என்ற சொல்லின் மறுவல். இதற்கு கடலின் மன்னன் என்று பொருள்.

ஜாமோரின்களின் தளபதிகளான குஞ்சாலி மரக்கார்களின் உதவியால் கோழிக் கோடை பலமிக்க கடற்படை தளமாக ஆக்கினார்கள்.



**வாஸ்கோட காமா ஜாமோரினைச் சந்தித்தல்**

சீனர்கள் 15வது நூற்றாண்டில் கோழிக்கோடுடன் தொடர்பு கொண்டு பண்டமாற்று முறையில் மிளகு, கிராம்பு, இஞ்சி, துணி முதலியவற்றை வாங்கிக் கொண்டுபட்டு தங்கம், வெள்ளி, தாமிரம் முதலிவற்றை கொடுத்தனர். வாஸ்கோடகாமா 1498ல் கோழிக்கோடருகே தான் இந்தியாவிற்குக் கடல் பயணமாக வழி கண்டு வந்து கரை இறங்கினான். இது வரலாற்று சிறப்புற்ற நிகழ்ச்சி. இது முதல் மேலை நாடுகளுக்கும் கிழக்கு ஆசிய நாடுகளுக்குமிடையே தொடர்பு ஏற்படலாயிற்று.

ஜாமோரின் போர்த்துகீசியரை வரவேற்ற போதிலும் அவர்கள் பரிசுகளாகக் கொடுத்த தொப்பிகள். கட்டமிட்ட துணிகள் பவளமாலைகள். கழுவுத் தொட்டிகளால் மகிழ்ச்சி அடையவில்லை. போர்த்துக்கீசியர் அங்கு வியாபாரம் செய்ய வசதிகள் கோரினர், ஜாமோரின் முதலில் தயங்கினாலும் பின்னர் கள்ளிக் கோட்டையில் அவர்களுக்கு ஒரு கோட்டை கட்டிக் கொள்ள அனுமதி அளித்தார்.

ஆங்கிலேயர்கள் 1615ல் அங்கு வந்தனர். 1772வ் திப்பு சுல்தானுடன் செய்து கொண்ட உடன்படிக்கைப்படி கள்ளிக் கோட்டை அவர்களுக்குக்குக் கிடைத்தது. மரத்தொழிலின் மையமாக இது இன்று விளங்குகிறது. கல்லாய் என்ற இதன் பகுதியில் உலகிலேயே மிகப் பரந்த மரச் சேமிப்புக் கிடங்கு உள்ளது.

கோழிக் கோடிற்கு ஒன்பது கி.மீ. தெற்கே பேய்ப்பூர் என்ற துறைமுகம் உள்ளது. திப்பு சுல்தான் இதற்கு சுல்தான் பட்டணம் எனப் பெயரிட்டு மலபாரில் தன் தலைநகராக ஆக்கிக் கொண்டான். இங்கு படகு கட்டும் துறையும், தென்னைப் பொருள்களை விற்கும் சந்தையும் உள்ளன.



**தேக்கு மரத்துண்டை ஒரு யானை இழுக்கும் காட்சி. பழைய கிருத்துவ வேதத்தில் குறிப்பிடப்பட்ட ஆலயத்தை தேக்கு மரத்தால் சால்மன் மன்னன் கட்டினானாம்**



# கோவில் தகராறு

வெகு காலத்திற்கு முன் தண்டகாரண்யப் பகுதியில் அக்கினி நேத்திரன் என்ற ராட்சஸன் இருந்தான். அவன் காட்டு மிருகங்களைப் பிடித்து விழுங்கி வந்தாலும் மனித மாமிசம் என்றால் மிகவும் விரும்பி உண்பான். ஆனால் அவனுக்கு மனிதர்கள் அக்காட்டில் எப்போதாவது தான் கிடைத்து வந்தார்கள்.

அந்தக் காட்டில் ஓரிடத்தில் ஒரு பாழடைந்த கோவில் இருந்தது. அதில் கால பைரவியின் விக்கிரகம் இருந்தது. அந்த தேவி மிகவும் சக்தி வாய்ந்தவள். ஒரு காலத்தில் அப்பகுதியில் வளமிக்க நாடு ஒன்று இருந்தது. அந்நாட்டு மக்கள் அத்தேவியை வழிபட்டுக் கேட்ட வரங்களை எல்லாம் அவள் அளித்து வந்தாள். ஒருமுறை அங்கு பயங்கர நில அதிர்ச்சி ஏற்பட்டது. அதனால் அந்நாடு நாசமுற்று மண்ணால் மூடப்பட்டது. உயிர் தப்பிய மக்கள் அப்பகுதியிலிருந்து எங்கோ சென்று விட்டார்கள். கால பைரவியின் ஆலயம் மட்டும் இடிந்து விழாமல் அப்படியே இருந்தது. அதைச் சுற்றி மரங்களும் செடிகளும் முளைத்து அப்பகுதி அடர்ந்த காடாகி விட்டது.

அந்த காட்டைத்தான் அக்கினி நேத்திரன் தன் உறைவிடமாகக் கொண்டான். ஒரு நாளிரவு அவனுக்கு பெரும் பசி எடுக்கவே அவன் அக்காட்டில் ஏதாவது மிருகம் கிடைக்குமா என்று அலைந்து திரிந்து பார்க்கலானான். அச்சமயத்தில் கால பைரவி தன் ஆலயத்திலிருந்து வெளியே வந்து நிலவில் உலாவிக் கொண்டிருந்தாள்.

தொலைவிலிருந்து கால பைரவியைப் பார்த்த அக்கினி நேத்திரன் பயங்கரமாக உறுமிக் கொண்டு தேவி நின்ற இடத்திற்கு ஓடினான். ராட்சஸன் தன்னை விழுங்க வருவதைக் கண்ட கால பைரவி கோபத்தோடு ''அடே! நான் யார் தெரியுமா? கால பைரவி''

—சங்கர சுவாமிநாதன்—



என்றாள். ராட்சஸனோ "நீ யாராக இருந்தால் என்ன? எனக்கு உணவாகப் போகிறாய், என் பசியும் தீரப் போகிறது" என்றான்.

கால பைரவியும் "உன் அகங்காரத்திற்கு தக்க தண்டனைக் கொடுக்கப் போகிறேன்" எனக் கூறித் தன் சூலத்தை எடுத்தாள். அதனை அவன் முகத்திற்கு எதிராகக் காட்டவே அதிலிருந்து தீப்பொறிகள் கிளம்பி ராட்சஸனின் கண்களைத் தாக்கின. மறுகணம் அவனது இரு கண்களும் பார்வையை இழந்தன. அப்போது ராட்சஸன் நடுநடுங்கி கால பைரவியின் கால்களில் விழுந்து "தாயே! உன் சக்தி தெரியாமல் என்னவோ கூறி விட்டேன். என்னை மன்னித்து நான் இழந்த பார்வையை அளிக்க வேண்டும்" என்று கெஞ்சினான்.

கால பைரவியும் சற்று கோபம் தணிந்து "அடே! உன் அகங்காரத்திற்கு தண்டனை கொடுத்தே ஆக வேண்டும். எனவே உனக்கு ஒரு கண்ணின் பார்வையை மட்டும் அளிக்கிறேன்" என்றாள். ராட்சஸனுக்கு உடனே ஒரு கண் பார்வை கிடைத்தது. அதனால் அவன் மகிழ்ந்து "தாயே! இன்று முதல் நான் உன் பக்தன். தினமும் உன் தரிசனம் கிடைக்க எனக்கு வரம் அருள வேண்டும்" என்று வேண்டினான்.

கால பைரவியும் தன் பாழடைந்த கோவிலைக் காட்டி "அங்குதான் நான் இருப்பேன். இன்று முதல் நீ மனிதர்களை விழுங்குவதை விட்டு விடு. உன் ராட்சஸத்தனம் ஒழிந்து நீ நற்கதி பெற நல்ல வழியில் செல்" என்றாள். ராட்சஸனும் அவளை வணங்கி நிற்கவே அவளும் மறைந்து போனாள். அவனும் தன் குகைக்குத் திரும்பிச் சென்றான்.

இப்படி நடந்ததை எல்லாம் அங்கு ஒரு மரத்தின் மீது ஒளிந்து விதேக நாட்டு ஒற்றன் விக்கிரமன் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் மரத்திலிருந்து இறங்கி கால பைரவியின் ஆலயத்திற்குப் போய் விக்கிரகத்தின் முன் நின்று "தாயே! என் மகன் ஊமை. எவ்வளவோ வைத்தியம் செய்தேன். ஆனால் அவனுக்குப் பேச்சு வரவில்லை. அவன் பேசும்படி நீதான் செய்தருள வேண்டும்" என்று வேண்டிவிட்டு அங்கிருந்து சென்றான்.

அவனைப் போலவே மகத நாட்டின் ஒற்றன் மங்களசேனன் கால பைரவிக்கும் ராட்சஸனுக்குமிடையே

நடந்தவற்றையெல்லாம் ஒரு புதரின் பின் மறைந்திருந்து பார்த்துக் கொண்டிருந்தான். அவனும் சற்று நேரத்திற்குப் பின்காலபைரவியின் ஆலயத்திற்குப் போய் தேவியிடம் ''தாயே! எனக்கு மணமாகி பத்து வருடங்களாகியும் ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. என் மனைவி குழந்தை பெற அருள்புரிய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டு அங்கிருந்து சென்றான்.

சில நாட்களுக்குப் பின் விக்கிரமனும் மங்களசேனனும் தம் வீடுகளை அடைந்த போது அவர்களுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. விக்கிரமனின் மகன் பேச ஆரம்பித்து விட்டான். மங்களசேனனின் மனைவி கர்ப்ப முற்றிருந்தாள்.

விக்கிரமன் விதேக மன்னனிடம் காட்டிலுள்ள காலபைரவி தேவியின் சக்தியைப் பற்றி விவரமாகக் கூறினான். மங்களசேனனும் மகத மன்னனிடம் காலபைரவியைப் பற்றி எடுத்துக்கூறினான். அதைக் கேட்டு விதேக மன்னன் படையுடன் கால பைரவியின் ஆலயம் இருந்த காட்டுப் பகுதிக்குச் சென்றான். மகத மன்னனும் தன் படைகளுடன் அப்பகுதியை அடைந்தான். இருவருமே அந்த ஆலயத்தைப் புதுப்பித்துத் தம் நாட்டில் சேர்த்துக் கொள்ள எண்ணினார்கள். அப்பகுதி இரு நாடுகளின் எல்லையில் இருந்தது.

மகத மன்னனும் விதேக மன்னனும் தம் படைகளுடன் ஒரே சமயத்தில் காலபைரவியின் ஆலயத்தை அடைந்தனர். மகத மன்னனைக் கண்ட விதேக மன்னன் ''என் நாட்டின் எல்லைக்குள் ஏன் படைகளோடு வந்தாய்? மரியாதையாகப் போய் விடு'' என்று உறுமினான். மகத மன்னனோ ''இது என் நாட்டின் பகுதி. இங்கு நீ ஏன் உன் படைகளோடு வந்தாய்? மரியாதையாக இங்கிருந்து உன் படைகளோடு உன் நாட்டிற்குப் போய்



விடு'' என்று மிரட்டினான்.

விதேக மன்னனோ ''வீணாக மிரட்டாதே. இது என் நாட்டின் பகுதிதான். மரியாதையாகப் போய் விடு. இல்லாவிட்டால் உன் படைகளை அடித்து விரட்டுவதோடு உன் நாட்டையும் கைப்பற்றிக் கொண்டு உன்னைச் சிறையில் தள்ளி விடுவேன்'' எனக் கர்ஜித்தான்.

மகத மன்னனோ ''இந்த சலசலப்புக்கெல்லாம் நான் பயப்படுவனல்ல. என் படை பலத்தைப் பற்றி உனக்குத் தெரியாததால் தான் இப்படி துள்ளுகிறாய். உன்னை நான்தான் கம்பி என்ன வைப்பேன். இதைப் புரிந்து கொள்'' என்று கொக்கரித்தான். இருவரும் சற்றும் பணிந்து போவதாக இல்லை. அதனால் இருவரிடையேயும் பலத்த வாக்குவாதம் மூண்டது. அவர்கள் தம்முள் யார் பலசாலி என்பதை முடிவு செய்யத் தம் படைகளைத் தயார் செய்தார்கள்.

இரு அரசர்களும் ஒருவரையொருவர் தாக்கிக் கொள்ளத் தயாராக நின்றனர். அப்போது அக்கினி நேத்திரன் அங்கு வந்தான். இரு அரசர்களும் அந்த ஆலயத்திற்காகப் போருக்குத் தயாராவதைக் கண்ட அவன் ''அடே அறிவற்றவர்களே! போர் என்றால் எவ்வளவு பேர் ரத்தம் சிந்துவார்கள்! நீங்கள் இவ்வாறு பல உயிர்களைத் தன் பொருட்டு பலி இடுவதை தேவி சகிக்க மாட்டாள். அவள் அமைதியை விரும்புபவள். உலகிற்கு நன்மை புரிபவள். மக்களை அழிக்க விரும்பாதவள். அதனால் நீங்கள் போர் புரிவதை விட்டு உங்கள் நாட்டு மக்கள் இங்கு வந்து தேவியைத் தரிசிக்க நல்ல ஏற்பாடுகளைச் செய்யுங்கள். அப்படிச் செய்யத் தவறினால் உங்கள் இருவரையும் கொன்று விழுங்கி விடுவேன்'' என்று கூறினான்.

இதைக் கேட்டு கால பைரவியே அவர்கள் முன் தோன்றி ''ராட்சஸனே! நீ இந்த இரு மன்னர்களை விட எவ்வளவோ மேலானவன். உனக்கு மற்ற கண்ணின் பார்வையையும் அளிக்கிறேன்'' எனக்கூறி மறைந்தாள்.

இதைக் கண்டு இரு மன்னர்களும் வெட்கப்பட்டார்கள். பிறகு இரு மன்னர்களும் சேர்ந்து அந்த ஆலயத்தைப் புதுப்பித்து மக்கள் அங்கு வந்து தேவியை வழிபட வசதிகள் செய்து கொடுத்தார்கள்.







# பொன்மயமான பொழுதுகள்

## விண்வெளி யாத்திரை

விண்வெளி வீரர் தேவா தன் விண் வெளிக் கலத்தில் ஒன்பது ட்ரோதளங்களை அழிக்கச் செவ்வாய் கிரகத்தை அடைகிறான்.

அப்போது

அஸ்ட்ராய்ட்ஸ் நம்மைத் தாக்கினவே

எதாவது சேதமா?

தாழ்வாய் பறக்க உதவும் அமைப்பு சேதமுற்றது.

இது முற்றிலும் சேதமடையுமுன் நாம் மூன்று திருப்பங்களே திருப்ப முடியும்.

தேவா அடிக்க வேண்டியவற்றைப் பார்க்கிறான்.

மூன்று திருப்பங்கள்! ஒன்பது இலக்குகள்!! நாம எல்லாவற்றையும் அடிக்க முடியாது.

நம்மால முடியும்

எப்படி?

# அம்புலிமாமா நேரம்

# கேள்விக் கணைகள்



**1**

அமெரிக்காவில் 1938ல் ஒரு நாடகம் வானொலியில் ஒலிபரப்பப்பட்டது. அதில் செவ்வாய் கிரகவாசிகள் அமெரிக்கர்களைத் தாக்க வருவதாகக் குறிப்பிடவே அமெரிக்கர்கள் பயந்து போனார்கள். அந்த நாடகம் எந்த நாவலின் அடிப்படையில் அமைந்தது? அதன் ஆசிரியர் யார்?



**2**

ரோமர்களின் புராணப்படி அவள் சந்திர தேவதை - சந்திரனின் பிறை அவளது வில். சந்திரனின் கிரணங்கள் அவளது அம்புகள்

ரோமர்களின் அந்த தேவதை யார்?

**3**

வான சாஸ்திரத்தில் 'வெள்ளைக் குள்ளன்' என்றால் என்ன?



4

இந்தப் போர்த்துக்கீசிய மாலுமியின் பெயர் இரு நட்சத்திரக் கூட்டங்களுக்கு இடப்பட்டுள்ளன. இவர் பெயர் என்ன? அந்த நட்சத்திரக் கூட்டங்கள் யாவை?



எல்லாக் கிரகங்களும் மேற்கிலிருந்து கிழக்கே சுழன்றாலும் ஒரு கிரகம் மட்டும் கிழக்கிலிருந்து மேற்கே சுழல்கிறது. அந்த கிரகம் எது?



5

6

இந்தப் பள்ளம் வான எரி நட்சத்திரத்தால் உண்டாக்கப்பட்டது இதன் அகலம் 1265 மீ 183 மீ ஆழம். உலகில் மிகப் பெரியதான இது எங்கே உள்ளது?



7

பூமி ஒரு வால் நட்சத்திர நுனியின் ஊடே 1910ல் சென்றது. அப்போது உலகமே என்ன நேருமோ எனப் பயந்தது. இந்த வால் நட்சத்திரத்தின் பெயர் என்ன?



# முகமுடி அச்சு வார்ப்பது

## மூக மூடி அச்சு வார்ப்பது போலத் தயாரியுங்கள்

1) உங்கள் முக அளவிற்கான அச்சைபசையைப்பயன்படுத்தித் தயாரித்து உலர வைக்கவும்.



2) செய்தித்தாள் ஒன்றைச் சிறு சிறு துண்டுகளாக்கி அந்த அச்சின் மீது முழுவதுமாக ஒட்டவும். ஈரப் பசை உலர்ந்ததும் அதன் மீது நான்கு தாள்களை ஒன்றன் பின் ஒன்றாக ஒட்டவும். இது ஒரு வாரம் உலர வேண்டும்.



3) இது முற்றிலும் உலர்ந்ததும் தனியே எடுத்துச் சரி செய்யவும். கண்களுக்கும், மூக்கிற்கும் வாய்க்கும் துவாரங்களைச் செய்யவும். பிறகு இதற்கு நீங்கள் விரும்பும் வர்ணத்தைப் பூசலாம் - புருவத்திற்கும், மீசைக்கும் கம்பிளி இழைகளை ஒட்டவும்.







## மூன்றே முறைகளில் **ஒரு பூனையை வரைய!**










பாண்டவர்கள் சூதாட்டத்தில் தோற்ற பின் வனவாசம் மேற்கொண்டு துரௌபதியுடன் ஹஸ்தினாபுரத்திலிருந்து காட்டிற்குப் புறப்பட்டார்கள். இந்திரசேனன் முதலானோர் ரதங்களோடு அவர்களின் பின்னால் சென்றனர்.

வழியில் அவர்கள் வர்த்தமான புரம் என்ற ஊரை அடைந்தார்கள். அப்போது மேலும் சிலர் ஹஸ்தினாபுரத்திலிருந்து அங்கு வந்து பாண்டவர்களைக் கண்டு ''தருமப் பிரபுவே! எங்களை விட்டு நீங்கள் எங்கே போகிறீர்கள்? எங்கு சென்றாலும் எங்களையும் உங்களுடனேயே அழைத்துச் செல்லுங்கள்'' என்று வேண்டினார்கள்.

தருமர் அவர்களிடம் ''நான் உங்களது சகோதரன் போன்றவன். நான் சொல்வதையும் கொஞ்சம் கேளுங்கள். நாங்கள் அனுபவிக்கப் போகும் கஷ்டங்களை எண்ணி பிதாமகர் பீஷ்மரும், பெரியப்பா திருதராஷ்டிரரும், எம் தாயார் குந்தி தேவியும் மனமுடைந்து போயிருக்கிறார்கள். நீங்கள் எனக்குச் செய்யும் மாபெரும் உதவி அவர்களுக்கு ஆறுதல் கூறுவது தான். எனவே நீங்கள் போய் அவர்களை நன்கு கவனித்துக் கொள்ளுங்கள். நீங்கள் வெகுதூரம் வந்து விட்டீர்கள். இனி திரும்பிப் போய் விடும்படிக் கேட்டுக் கொள்கிறேன்'' என்றார்.

தருமரின் இந்த வேண்டுகோளை அவர்கள் ஏற்று பாண்டவர்களைப் பாராட்டியவாறே ஹஸ்தினாபுரத்திற்குத் திரும்பிச் சென்றார்கள். இதற்குப் பின் பாண்டவர்கள் கங்கை நதிக் கரையை அடுத்துள்ள காட்டுப் பகுதியை அடைந்தார்கள். அப்போது மாலையாகி இருட்டத் தொடங்கியது. அவர்கள் ஒரு பெரிய மரத்தின் கீழ் தங்

—மைத்திரேயரின் சாபம்—



கினார்கள். அப்போது சில பிராம் மணர்கள் வந்து அவர்களோடு சேர்ந்து கொண்டார்கள்.

அவர்கள் பலகதைகளைப் பாண்ட வர்களுக்குக் கூறி அன்றைய இரவுப் பொழுதைக் கழிக்கச் செய்தார்கள். காலையானதும் பாண்டவர்கள் கங் கையில் குளித்து விட்டுக் கிளம்ப லானார்கள். அப்போது அந்த பிராம் மணர்களில் சிலர் தருமருடன் வருவ தாகக் கூறினார்கள்.

தருமரும் ''நாங்கள் எங்களது உடைமைகளையெல்லாம் இழந்து கொடுத்த வாக்கிற்குக் கட்டுப்பட்டு வனவாசம் செய்ய வந்திருக்கிறோம். இந்த நிலையில் நீங்களெல்லாம் காட் டில் எங்களோடு எப்படி இருக்க முடி யும்? எங்களுக்காக நீங்கள் கஷ்டப்பட வேண்டாம். நீங்கள் உங்கள் இருப் பிடங்களுக்குச் செல்வதே நல்லது'' என்றார்.

அவர்களோ ''நாங்கள் போக மாட் டோம். உங்களோடுதான் இருப் போம்'' என்றார்கள். அப்போது தருமர் ''சற்று யோசித்துப் பாருங்கள். நாங்கள் உங்களுக்காகப் பழங்களை யும் காய் கிழங்குகளையும் சேகரித்துக் கொண்டு வரவேண்டும். இதற்காக என் தம்பிகளைச் சிரமப்படுத்த நான் விரும்பவில்லை'' என்றார்.

அந்தணர்களோ ''உங்களுக்கு அந்த சிரமம் வேண்டாம். எங்களுக்குத் தேவைப்படுவதை நாங்களே பார்த் துக்கொள்கிறோம். உங்கள் கூட இருப் பது ஒன்றே எமக்குப் போதும்'' என்றார்கள். அதுகேட்டு தருமர் தம் புரோகிதரான தௌம்யரிடம் ''இந்த பிராம்மணர்களெல்லாம் எங்களோடு இருந்து கஷ்டங்களை அனுபவிக்கத் தயார் என்று சொல்கிறார்கள். இதெல் லாம் வேண்டாம் என்றாலும் கேட்க மறுக்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் உணவு கொடுக்க வேண்டுமே. அதற்கு ஏதாவது வழி செய்ய முடியுமா?'' என்று கேட்டார்.

தௌம்யரும் ''உணவின் உற்பத் திக்குக் காரணம் சூரியன். சூரியனை ஆராதித்தால் இவர்களுக்கு உணவு கொடுக்க வழி பிறக்கும்'' எனக்கூறி சூரிய ஸ்தோத்திரத்தை உபதேசித்தார். தருமரும் சூரியனை ஆராதிக்கவே சூரிய பகவான் அவர் முன் தோன்றி ''தருமரே! இது அட்சய பாத்திரம். இதனை துரௌபதியிடம் கொடுத்து காய், கிழங்குகளை இதில் சமைக்கச் சொல். அப்போது எவ்வளவு பேர் களுக்கு வேண்டுமானாலும் இதி



லிருந்து உணவு கிடைக்கும்'' எனக் கூறி அட்சய பாத்திரத்தை அவரிடம் கொடுத்து விட்டு மறைந்தார்.

தருமரும் அதனை துரௌபதி யிடம் கொடுக்கவே துரௌபதியும் அதில் காய்கறிகளை சமைத்து அதி லிருந்து அறுசுவை உண்டி எடுத்து தின மும் எல்லோருக்கும் கொடுத்து வந் தாள். பாண்டவர்கள் கங்கைக் கரையி லிருந்து கிளம்பிப் பல நதிகளைக் கடந்து காம்ய வனத்தை அடைந்தார் கள்.

பாண்டவர்கள் சென்ற பின் திருத ராஷ்டிரன் விதுரனை அழைத்து ''பாண்டவர்கள் வனவாசம் போன தால் மக்கள் நம்மை விட்டு விலகியே இருக்கிறார்கள். அவர்கள் நமக்கு தீங்கு ஏதாவது விளைவிப்பார் களோ?'' என்று கேட்டான்.

விதுரனும் ''அரசே! மன்னன் தர்ம நியாயம் தவறாமல் இருக்க வேண் டும். சகுனியை கொண்டு மோசம் புரிந்து நீங்கள் பாண்டவர்களின் நாட்டை அபகரித்துக் கொண்டு விட் டீர்கள். அவர்களால் துரியோதனன் முதலானோரை ஒழிக்க முடியும். அதனால் உம் புதல்வர்கள் பாண்ட வர்களை அழைத்து அவர்களது நாட்டை அவர்களிடமே கொடுத்து விட வேண்டும். துச்சாதனன் துரௌ பதியிடமும் பீமனிடமும் தன் செய லுக்காக மன்னிப்புக் கேட்க வேண் டும். இதுதான் நான் உங்களுக்கு கூறும் யோசனை'' என்றார்.

அதைக் கேட்ட திருதராஷ்டிரன் கோபம் கொண்டு ''நீ என் புதல்வர் களையா மன்னிப்புக் கேட்கச் சொல் கிறாய்? நீ என்றுமே அவர்களை வெறுக்கிறாய். பாண்டவர்களுக்கே பரிந்து பேசுகிறாய். உனக்கு என்னைக் கண்டாலும் பிடிக்கவில்லை. இனி மேல் இங்கே இராதே. அந்தப் பாண்ட வர்கள் இருக்கும் இடத்திற்கே போ'' என்று கூறினான். விதுரரும் உடனே ரதத்தில் அமர்ந்து காம்யக வனத்திற் குச் சென்றார்.

விதுரர் காம்பக வனத்தை அடைந்த போது தருமர் பல அந்தணர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். விதுரர் வரு வதைக் கண்டதும் அவர் மனதில் சந் தேகம் எழுந்தது. கௌரவர்கள் மீண்டும் சூதாட அழைத்து தம்மிட முள்ள ஆயுதங்களைப் பறித்துக் கொள்ளத் திட்டமிட்டு தங்களை அழைத்துச் செல்ல விதுரரை அனுப்பி இருக்கிறார்களோ என்று அவர் சந்தே கப்பட்டார்.

ஆனாலும் விதுரர் வந்ததும் தருமர் தம் சகோதரர்களுடன் சென்று அவரை எதிர்கொண்டு அழைத்தார். அவருக்கு மரியாதை செய்து ஆசனம் கொடுத்து உட்கார வைத்து அவர் என்ன வேலையாக வந்துள்ளார் என்று தருமர் பணிவுடன் கேட்டார்.

விதுரரும் ''திருதராஷ்டிரன் என் மீது கோபம் கொண்டு வெளியேறும்படிக் கூறி விட்டான். அதனால் இங்கு வந்து விட்டேன்'' என்றார். தருமரும் ''மிகவும் நல்லதாய்ப் போயிற்று. நீங்கள் இங்கேயே இருந்து எங்களுக்கு அறிவுரை கூறி வாருங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்.

விதுரர் காம்யக வனத்திற்குப் போய் பாண்டவர்களோடு இருந்து வருகிறார் என்ற செய்தியை திருதராஷ்டிரன் அறிந்தான். இதனால் தனக்கு நஷ்டமும் பாண்டவர்களுக்கு லாபமுமே என்று அவன் உணர்ந்தான். அதனால் அவன் சஞ்சயனை அழைத்து ''சஞ்சயா! நான் கோபத்தில் விதுரனை இங்கிருந்து போய் விடும்படிக் கூறி விட்டேன். அவன் எனக்கு தம்பியாக மட்டும் இராமல் அறிவுரை கூறும் அமைச்சராகவும் இருப்பவன். என் கடுஞ் சொற்களைச் சகித்துக் கொள்ள முடியாமல் அவன் காம்யக வனம் சென்று பாண்டவர்களோடு இருக்கிறான். அவன் இல்லாமல் என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. நீ இப்போதே போய் அவனை இங்கே அழைத்து வா'' என்று கூறினான்.

சஞ்சயனும் காம்யக வனத்திற்குப் போய் தருமரிடம் விதுரரை அழைத்துப் போக தான் வந்திருப்பதாகக் கூறினான். பிறகு அவன் விதுரனிடம் ''ஐயா! நீங்கள் இங்கே வந்து விட்டதால் திருதராஷ்டிரருக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. உங்களை அழைத்து வரச் சொல்லி என்னை அனுப்பியுள்ளார்'' என்றான். விதுரரும் தருமரின் அனுமதியைப் பெற்று சஞ்சயனுடன் ஹஸ்தினாபுரம் போய்ச் சேர்ந்தார்.



திருதராஷ்டிரன் விதுரரைக் கண்டதும் அவரைக் கட்டித் தழுவிக் கொண்டு ''என்னதான் நான் கோபித்துக் கொண்டாலும் நான் சொல்லி அனுப்பியதும் நீ என்னைக் காண வந்து விட்டாய். நீ மிகவும் நல்லவன். இவ்வளவு நாட்களாக நீ இல்லாமல் தவித்துப் போய் விட்டேன். என்னை மன்னித்து விடு'' என்றான்.

விதுரரும் ''நீங்கள் மன்னர். நீங்கள்



யைத் தெரிவித்தான்.

சகுனியோ ''கவலைப்படாதே. பாண்டவர்கள் தம் வாக்கிற்குக் கட்டுப்பட்டவர்கள். அதனால் இங்கு வரவும் மாட்டார்கள். சதி எதுவும் செய்யவும் மாட்டார்கள். அப்படி வந்தாலும் பரவாயில்லை. நான்தான் இருக்கிறேனே'' என்றான்.

துரியோதனனுக்கு இதனால் ஆறுதல் ஏற்படவில்லை எனக் கண்ட கர்ணன் ''நாம் இப்போதே நம் படைகளோடு போய் அந்தப் பாண்டவர்களைக் கொன்று விடுவோம். இது போன்ற அரிய வாய்ப்பு மறுபடியும் கிடைக்காது'' என்றான். இதைக் கேட்டு எல்லோரும் ''சபாஷ்! இப்படியே செய்து விடலாம்'' என்று ஆர்ப்பரித்தார்கள்.

இதே சமயத்தில் வியாசர் திருதராஷ்டிரனைக் காண வந்தார். அவர் அவனிடம் ''உன் புதல்வர்கள் வஞ்சகமாகச் சூதாடிப் பாண்டவர்களைக் காட்டிற்கு அனுப்பி விட்டார்கள். இது எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. இப்போதோ உன் புதல்வர்கள் காட்டிலுள்ள பாண்டவர்களைத் தாக்கிக் கொல்லத் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். இந்த முயற்சியில் உன் புதல்வர்கள்தான் தோற்று அவமானப்படுவார்கள். அதனால் அவர்கள் இந்த முயற்சியில் இறங்காமல் நீ தடு. பீஷ்மர், துரோணர், விதுரன் ஆகியோர் இதை ஆதரிக்கிறார்களா?'' என்று கேட்டார்.

திருதராஷ்டிரனும் ''இல்லை. என் மகனிடம் எவ்வளவு நான் சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறான். அதனால் நீங்கள் அவனுக்கு அறிவுரை

கட்டளை இட்டதால் முன்பு போனேன். இப்போது கட்டளை இட்டதால் திரும்பி வந்தேன். எனக்கு கௌரவர்களும் பாண்டவர்களும் சமமே. இப்போது அவர்கள் கை சற்றுத் தாழ்ந்து விட்டதால் அவர்களிடம் இரக்கம் கொண்டேன். இது நியாயம்தானே'' என்றான்.

துரியோதனனுக்கு விதுரர் திரும்பி வந்த செய்தி கிடைத்தது. உடனே தன் ஆப்தர்களான கர்ணன், சகுனி, துச்சாதனன் ஆகிய மூவரையும் கூப்பிட்டு ''போன விதுரன் திரும்பி வந்து விட்டான். அவன் பாண்டவர்களுக்காகப் பரிந்து பேசுபவன். இனி என் தந்தைக்கு என்ன அறிவுரை கூறப் போகிறானோ! பாண்டவர்களால் இனி என்ன ஆபத்து நமக்கு வரப் போகிறதோ?'' என்று தன் கவலை

கூறுங்கள்'' என்று வேண்டினான். வியாசரோ ''நான் இப்போதே போயாக வேண்டும். இன்னும் சற்று நேரத்தில் மைத்திரேயர் என்ற முனிவர்இங்குவருவார். அவர்உன்மகனுக்குச்சொல்லவேண்டியதைச்சொல்லுவார்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

வியாசர்கூறியபடியே மைத்திரேய முனிவர் திருதராஷ்டிரனைக் காண வந்தார். அவர் திருதராஷ்டிரனிடம் ''நான்காம்யக வனத்திலுள்ள பாண்டவர்களைப் பார்த்துவிட்டு நேராகக் கிளம்பி வருகிறேன். அவர்கள் காட்டில் பல கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள்'' என்றார்.

திருதராஷ்டிரனும் ''முனிவரே! பாண்டவர்கள் நலமாகத்தானே இருக்கிறார்கள்? அவர்கள் இங்கே வந்து விடப் போவதில்லையே'' என்று கேட்டான். மைத்திரேயர் ''பாண்டவர்கள் வாக்கு தவறாதவர்கள். அந்த நல்லவர்களோடு உன் மகன் சூதாடி மோசம் செய்ததைக் கேள்விப்பட்டேன்'' எனக் கூறிவிட்டு துரியோதனனைப் பார்த்து ''துரியோதனா! நீ பாண்டவர்களைப் பகைத்துக் கொள்ளாதே. அவர்களோடு சமாதானமாகப் போய் விடு. பீமன், அர்ஜுனன், துருபதன், கிருஷ்ணர் என்பவர்களெல்லாம் அவர்களுக்கு பக்க பலமாக இருக்கிறார்கள். அதனால் நீ அவர்களோடு நட்புறவு கொள்'' என்று அறிவுரை கூறினார்.

துரியோதனனோ கேலியாகச் சிரித்து தன் தொடையைத் தட்டி ''அவர்கள் வரட்டும். ஒரு கை பார்க்கிறேன்'' என்றான். மைத்திரேயர் கோபம் கொண்டு ''அடே! உன் தொடையை பீமன் பிளந்து உன்னைக் கொல்ல வேண்டும் என்று சபிக்கிறேன்'' என்று சாபம் கொடுத்தார். திருதராஷ்டிரன் ''ஐயோ! இந்த சாபம் பலிக்காமல் போகும்படிச் செய்யுங்கள்'' என்று கதறினான்.

மைத்திரேயரும் ''அதற்கு ஒரே வழி உன் மகன் பாண்டவர்கள் மீது பகைமை கொள்ளாமல் சமாதானமாகப் போவதுதான்'' என்றார். திருதராஷ்டிரன் ''ஏன் குறிப்பாக பீமன்தான் என் மகனுக்கு எதிரி என்கிறீர்கள்? இதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டான். அவரும் ''இதை நீ விதுரரிடம் கேட்டுத் தெரிந்து கொள்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து சென்றார்.



# நடிகமணி யார்?

மாளவ நாட்டில் ஆண்டுதோறும் தசராவின் போது நடிகர்களிடையே போட்டி வைத்து மிக நன்றாக நடித்தவரைத் தேர்ந்தெடுத்து அவருக்கு 'நடிகமணி' என்ற பட்டம் அளிக்கப்பட்டு வந்தது. போட்டியின் நடுவர் அந்நாட்டின் முதலமைச்சர்.

அந்த ஆண்டு ராஜகுமாரனாக வேடமணிந்து சிறப்பாக நடித்தவர்களென மூவர் வந்தனர். ஒருவன் அரசனின் மைத்துனனின் மகன். இன்னொருவன் நாட்டின் சேனாதிபதியின் மகன். மூன்றாவதவன் ஒரு குடியானவனின் மகன்.

எல்லோரும் அரசனின் மைத்துனனின் மகனுக்கு 'நடிகமணி' பட்டம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் முதலமைச்சர் 'நடிகமணி' பட்டம் குடியானவனின் மகனுக்கு என்று அறிவித்த போது எல்லோரும் ஆச்சரியப்பட்டனர்.

மன்னனும் முதலமைச்சரிடம் ''நீங்கள் குடியானவனின் மகனுக்கு 'நடிகமணி' பட்டம் அளிக்க ஏன் தீர்ப்பளித்தீர்கள்?'' என்று கேட்டான். அவரும் ''அரண்மனையிலே வளரும் தங்கள் மைத்துனரின் மகனும், அரச குடும்பத்தோடு நெருங்கிப் பழகும் சேனாதிபதியின் மகனும் அரசகுமாரர்களாக நடிக்க தனிப் பயிற்சி செய்து சிரமப்பட வேண்டியதில்லை. ஆனால் ஒரு குடியானவனின் மகன் அரசகுமாரனாக நடிக்க மிகவும் கஷ்டப்பட்டு முயற்சி செய்ய வேண்டும். எனவே சமமாக உள்ள மூவரில் நான் குடியானவனின் மகனையே தேர்ந்தெடுத்தேன்'' என்றார்.

மன்னனும் ''ஆகா! இதுதான் சரியான தீர்ப்பு'' என்று கூறி மகிழ்ந்தான்.



# பனை மரம்

பழங்காலத்தில் இப்போது போலக் காகிதம் இருக்கவில்லை. அதனால் தோல் களிலும் பனை ஓலைகளிலும் எழுத வேண்டியதை எழுதினார்கள். நம் நாட்டிலும், நேபாளம், திபெத் ஆகிய நாடுகளிலும் புனித மத நூல்கள் பனை ஓலைகளில் எழுதப்பட்டன. இன்றும் நேபாளத்தில் இம்முறை கையாளப்படுகிறது. நம் நாட்டில் பழங்கால ஓலைச் சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. சென்னைப் பல்கலைக் கழகத்தின் 'ஓரியண்ட் ஸ்கிரிப்ட்ஸ்' லைப்ரரியிலும், தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலையத்திலும் பல பழங்கால ஓலைச் சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. பனை ஓலைகளில் எழுத்தாணியால் எழுதுகிறார்கள். இந்த எழுத்துக்கள் எளிதில் அழிவதில்லை. பனை ஓலைகளில் படங்களைக் கூட வரைந்திருக்கிறார்கள்.



நம் நாட்டில் பனை மரங்கள் மணற்பாங்கான பகுதிகளில் நன்கு வளர்கின்றன. கங்கைக் கரையிலிருந்து கன்னியாகுமரி வரை இம்மரங்கள் பரவி வளர்ந்திருப்பதைக் காணலாம். இதன் அடி மரச் சுற்றளவு 60–75 செ.மீ. இது சாதாரணமாய் 30–40 மீ. உயரம் வளர்கிறது. இதன் ஓலை விரிந்திருக்கும். இது விசிறி செய்யப் பயன்படுகிறது. கூரைகளை மேயவும் பனை ஓலைகள் பயன்படுகின்றன. பனை ஓலையால் பெட்டிகளும் பாய்களும் தயாரிக்கப் படுகின்றன. விசிறிகள், தாழங்குடைகள் முதலியனவும் இவற்றால் தயாரிக்கப் படுகின்றன. பனை நாரால் கயிறும் திரிக்கப்படுகிறது. பனை மரத்திலிருந்து பதனீர் இறக்கப் படுகிறது. கோடையில் பனம் நொங்கைப் பலர் விரும்பிச் சாப்பிடுகிறார்கள். இது உடலுக்குக் குளிர்ச்சியை அளிக்கிறது.

*நம் நாட்டு முனிவர்கள் - 13*

# உபமன்யு



உபமன்யு அயோத தௌம்யர் என்பவரின் சீடர். குருவின் கட்டளைப்படி இவர் ஆசிரம ஆடு மாடுகளை மேய்த்து வந்தார். குரு தம் சீடனைக் கடுமையாகப் பரீட்சித்தார்.

ஒருநாள் அவர் உபமன்யுவிடம் "நீ ஆடு மாடுகளை மேய்க்கிறாயே. மதிய உணவிற்கு என்ன செய்கிறாய்?" என்று கேட்டார். உபமன்யுவும் "ஆடு மாடுகள் மேயும் போது நான் பக்கத்திலுள்ள கிராமங்களுக்குப் போய் 'பிக்ஷை' வாங்கிச் சாப்பிடுகிறேன்" என்றார். குருவோ "நீ இனி அவ்வாறு செய்யக் கூடாது" என்று கூறித் தடுத்து விட்டார்.

சில நாட்களாகியும் உபமன்யுவின் உடல் இளைக்காமல் இருப்பதைக் கண்டு குரு "இப்போது மத்தியான்னம் என்ன சாப்பிடுகிறாய்?" என்று கேட்டார். உபமன்யுவும் "ஆடு மாடுகளை ஆசிரமத்தில் விட்டு விட்டு மாலையில் 'பிக்ஷை'க்குப் போய் கிடைத்ததைக் கொண்டு வந்து சாப்பிடுகிறேன்" என்றார். குருவோ "மாலையில் பிக்ஷைக்குப் போவது தவறு. இனிமேல் இப்படிச் செய்யாதே" என்று தடுத்து விட்டார்.

சில நாட்களாயின. அப்போதும் உபமன்யுவின் உடல் இளைக்காதது கண்டு குரு "இப்போது என்ன உண்கிறாய்?" என்று குரு கேட்கவே உபமன்யுவும் "ஆடு மாடுகளின் மடிகளின் பாலைக் குடிக்கிறேன்" என்றார். குருவோ "கன்றுகளுக்கும் குட்டிகளுக்கும் கிடைக்க வேண்டிய பாலை நீயா குடிக்கிறாய்? இனிமேல் இப்படிச் செய்யக்கூடாது" என்றார்.

அப்போதும் சில நாட்களுக்குப் பின் உபமன்யுவின் உடல் இளைக்கவில்லை. அதைக் கண்ட குரு "இப்போது என்ன சாப்பிடுகிறாய்?" என்று கேட்டார். உபமன்யுவும் "கன்றுக் குட்டிகள் மாடுகளின் பாலைக் குடித்த பின் அவற்றின் வாய்களில் தங்கும் நுரையைச் சாப்பிடுகிறேன்" என்றார். குருவோ "இது தவறு. இதற்கும் என் அனுமதி இல்லை" என்றார்.

சில நாட்களாயின. அப்போதும் உபமன்யுவின் உடல் இளைக்காதது கண்டு குரு ஆச்சரியப்பட்டார். ஒருநாள் மாலை ஆடு மாடுகள் மட்டும் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தன. உபமன்யு வரவில்லை. குரு அவரைத் தேடிக் கொண்டு காட்டினுள் சென்ற போது அவர் ஒரு பள்ளத்தில் விழுந்து கிடப்பதைக் கண்டார். உபமன்யுவும் "பசி தாங்காமல் ஏதோ இலைகளைப் பறித்துச் சாப்பிட்டேன். அதன் பயனாக என் கண் பார்வை போய் விட்டது" என்றார்.

குருவும் "நீ அசுவினி தேவர்களை வேண்டிக் கொள். உனக்கு அவர்கள் நீ இழந்த பார்வையை அளிப்பார்கள்" என்றார். உபமன்யுவும் அசுவினி தேவர்களைப் பிரார்த்திக்கவே அவர்களும் அவர் முன் தோன்றி "உம் குரு பக்தி பாராட்டத் தக்கது. உமக்குப் பார்வை கிடைப்பதோடு சூட்சும திருஷ்டியும் கிடைக்கும்படிச் செய்கிறோம்" எனக்கூறி அவ்வாறே செய்து அவரை ஆசீர்வதித்து விட்டு மறைந்தார்கள்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. சர் ரோஜர் பானிஸ்டர் எவ்வாறு புகழ் பெற்றார்?
2. விண்வெளியில் செல்லும் வீரர்களுக்கு ஆகாயம் எந்த நிறத்தில் தோன்றுகிறது?
3. 'சிவப்பு கிரகம்' என எந்த கிரகம் குறிப்பிடப்படுகிறது?
4. பொம்மலாட்டம் எங்கு ஆரம்பமாயிற்று?
5. ஆக்ராவை யார், எப்போது நிர்மாணித்தார்?
6. வெள்ளி விழா இருபத்தைந்து ஆண்டுகள் நிறைவுறுவதைக் குறிக்கிறது. அப்படியானால் 'பேபர் அனிவர்சரி' என்றால் என்ன?
7. ஜிப்ஸிகளின் மொழி என்ன?
8. பூடிக் முறை ஓவியம் எந்நாட்டில் ஆரம்பமாகியது?
9. 1921க்கு முன் டேபிள் டென்னிஸின் பெயர் என்ன?
10. ரத்தத்தின் நான்கு குரூப்கள் யாவை?
11. தங்கம், வைரம், வைடூரியம் போன்றவற்றின் அளவின் பெயர் என்ன?
12. தற்போது அஞ்சல் பெட்டிகள் சிவப்பு நிறத்தில் உள்ளன. இதற்கு முன் அவை எந்த நிறத்தில் இருந்தன?
13. ரோமன் முறையில் ஒரு எண்ணை மட்டும் எழுத முடியாது. அந்த எண் எது?
14. வரிக் குதிரையின் சிறப்பு யாது?
15. வெள்ளை யானைகள் எங்கு உள்ளன?
16. அட்லாண்டிக் கடலைத் தனியாகவே விமானம் ஓட்டிக் கடந்த வீராங்கனை யார்?

## விடைகள்

1. முதன் முதலில் ஒரு மைல் தூரத்தை நான்கு நிமிடங்களில் ஓடியவர்.
2. ஊதா.
3. செவ்வாய் கிரகம்.
4. எகிப்து, இந்தியா.
5. சிகந்தர் லோடி, கி.பி. 1506ல்.
6. முதலாவது ஆண்டு விழா.
7. ரோமனி.
8. இந்தோனேசியா.
9. பிங் – பாங்
10. ஏ, பி, ஓ, ஏபி.
11. காரெட்.
12. இலைப் பச்சை.
13. பூஜ்யம்.
14. எந்த இரு வரிக் குதிரைகளின் வரிகள் ஒத்திராது.
15. தாய்லாந்து.
16. அமீலியா எர்ஹார்ட்.

# பொன்மயமான பொழுதுகள் நெ. 3. விடைகள்

1. அஹிம்சாவாதி.
2. முயல். ஆஸ்டிரேலியா கண்டத்திற்கு அயல் நாட்டிலிருந்து வந்த முயல்கள் ஏராளமாகப் பெருகி ஆடு மாடுகளுக் கான புல்லைச் சாப்பிட்டு அங்குள்ள குடியானவர்களுக்குப் பெருந் தொல் லையைக் கொடுத்தன.




4. மூன்று. முதலாவது வெளுப்பானால் இரண்டாவது கருப்பாகும். மூன்றாவது டன் ஒரு ஜோடி தயாராகும்.

5. சோமன் படகில் யானையை நிறுத்தி படகு நீரில் அமுங்கும் வரை பார்த்துப் படகில் குறியிடுவான். பிறகு யானையை ஓட்டி விட்டு படகில் அந்த மட்டம் வரை மணலை நிரப்புவான். பிறகு அந்த மணலைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் எடையந்திரத்தில் நிறுத்தி யானை யின் எடையைக் கண்டு பிடிப்பான்

6. முதலில் குண்டு களை மூன்று, மூன்று, இரண்டு எனப் பிரித்து முதலிரண்டு பிரிவு குண்டு களைத் தராசின் தட்டுகளில் எதிர் எதிராக வைத்து நிறுக்க வேண் டும். இவை சம மாக இருந்தால் மீதமுள்ள இரு குண்டு களை ஒவ்வொரு தட்டில் வைத்து நிறுத்தால் மாறுபடும் குண்டைக் கண்டு பிடிக்கலாம். முதல் இரு பிரிவு குண்டு கள் சமமமாக இல்லாது போனால் அதில் நிறை குறைவானதை எடுத்து தட்டுகளில் போட்டும் பார்த்துக் கண்டு பிடித்து விடலாம்.





7. ஐந்து வரிசைகளில் பத்து மண்டை ஓடுகள்







# அதிகாரி நியமன விதி

சொர்ணபுரி மன்னன் சுந்தர வர்மனின் ஆட்சி திறன்பட நடந்து கொண்டிருந்தது. நகர, கிராம அதிகாரிகளின் நியமனங்களை மன்னனே நேரடியாகச் செய்து அவர்களது பதவி காலம் ஒரு ஊரில் நான்கு ஆண்டுகள்தான் என்று வரையறுத்தான். நான்கு ஆண்டுகள் முடிந்ததும் அதிகாரிகளை இடமாற்றம் செய்தும் வந்தான்.

அந்நாட்டில் வித்தியாநகர் என்ற ஊரில் யாவரும் நன்கு படித்தவர்கள். அறிவாளிகள். மன்னன் அவ்வூரின் அதிகாரியாக நாகேந்திரன் என்பவனை அனுப்பினான். அவன் கர்வம் பிடித்தவன். ஊர் நலனைக் கருத்தில் கொள்ளாமல் தன் மனம் போன போக்கில் நிர்வாகம் செய்யலானான்.

வித்தியா நகரவாசிகளுக்கு நாகேந்திரனின் நிர்வாக முறை சற்றும் பிடிக்கவில்லை. அவர்கள் தம் பிரதிநிதியாக ரகுராமன் என்பவனை தேர்ந்தெடுத்து தம் பிரச்னைகளை அவ்வூர் அதிகாரியிடம் சொல்ல ஏற்பாடு செய்தனர். நாகேந்திரனும் முதலில் ரகுராமன் அவ்வூராரின் தலைவனாயிற்றே என்று அவனுக்கு மரியாதை கொடுத்தான். ஆனால் நாளாக ஆக அவன் அவனை அலட்சியப் படுத்தியதோடு தொல்லைகளும் கொடுக்கலானான்.

இதற்குக் காரணம் ரகுராமன் எதையும் சுற்றி வளைத்துப் பேசாமல் நேரடியாக பேசிக் கண்டிக்க வேண்டிய சமயத்தில் கண்டித்து வந்ததுமாகும். நாகேந்திரன் ஒருமுறை மிகவும் கோபம் கொண்டு ரகுராமனை ஊரை விட்டு வெளியேறும்படி உத்தரவிட்டான். ஆனால் ஊரார் ஒன்று சேர்ந்து நாகேந்திரனையே ஊரை விட்டு வெளியேறும்படிக் கூறினார்கள். நாகேந்திரன் தனக்கு ராணுவ உதவி வேண்டுமென்றும் ஊரார் கலகம் செய்கிறார்கள் என்றும் மன்னனுக்குத் தகவல் அனுப்பினான்.

—பாபநாசம் சாமா—



கொண்டே இருப்பார்கள்'' என்றான்.

மன்னனும் ரகுராமன் சொல்வதில் உண்மை இருக்கிறது என உணர்ந்து நாகேந்திரனை உடனே பதவி நீக்கம் செய்தான். இதனால் ஆத்திரமடைந்த நாகேந்திரன் நாடெங்கும் வித்தியா நகர மக்கள் முரடர்கள் என்றும் யாருக்கும் அடங்காதவர்கள் என்று பொய்ப் பிரசாரம் செய்யலானான். இதனால் அந்த ஊருக்கு யாரும் நிர்வாக அதிகாரியாக போக பயந்து அப்பதவியை ஏற்கவும் மறுக்கலானார்கள்.

இப்படி சில நாட்கள் கழிந்தன. மன்னன் வித்தியா நகரின் நிர்வாக அதிகாரியை நியமிக்கும் சிக்கலான பிரச்னை பற்றி யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். அவன் ரகுராமனை அழைத்து ''நீயே உன் ஊரின் நிர்வாக அதிகாரியாக இரு. இப்பதவியை ஏற்க யாரும் முன் வரவில்லை'' என்றான்.

ரகுராமனோ ''இப் பதவியை நானோ அல்லது என் ஊரிலுள்ள வேறு யாருமோ ஏற்க மாட்டோம். ஏனெனில் நாகேந்திரன் மீது புகார் கொடுத்தது நானும் ஊராரும். நானோ வேறு என் ஊர்க்காரர் ஒருவரோ இப் பதவியை ஏற்றால் சுயநலம் காரணமாயும் பதவி ஆசை கொண்டும் அவன் மீது புகார் கூறி அவனை வேலையை விட்டு நீக்கச் செய்தோம் என்றே மற்றவர்கள் நினைப்பார்கள். எங்களுக்குப் பதவி ஆசை இல்லை. வேறு யாரையாவது இப்பதவிக்கு நியமியுங்கள்'' என்றான்.

மன்னன் அவனது உயரிய பண்பைப் பாராட்டினான். அதன் பிறகு தன் மனைவியின் தூரத்து உறவினனான பரதன் என்பவனை அழைத்து

மன்னன் என்ன விஷயம் என்று விசாரிக்க அவனே வித்தியா நகருக்குச் சென்றான். அங்கு விசாரித்ததில் தவறு முழுவதும் நாகேந்திரனுடையதே என அவனுக்குத் தெரிந்தது. அவன் நாகேந்திரனை கடுமையாக எச்சரிக்கவே அந்த அதிகாரியும் பயந்து இனி ஒழுங்காக நடப்பதாகக் கூறித் தன் தவறுகளை மன்னிக்க வேண்டினான்.

ஆனால் ரகுராமனோ ''இவனை மன்னிக்கக் கூடாது. வேலையிலிருந்தே நீக்கி விட வேண்டும். அவ்வாறு செய்தால்தான் மற்ற அதிகாரிகளுக்கு பயம் இருக்கும். அப்படிச் செய்யா விட்டால் தவறு புரியும் அதிகாரிகள் மன்னிப்பு கேட்டு விட்டால் போதும், தமக்கு தண்டனை எதுவும் கிடைக்காது என்று எண்ணி இறுமாந்து மேலும் தவறுகளைப் புரிந்து

''நீ வித்தியா நகரின் நிர்வாக அதிகாரியாகப் போக வேண்டும். அவ்வூரார் மிகவும் நல்லவர்கள். நாகேந்திரன் என்ற அதிகாரி அங்கே இருந்து தன் பெயரைக் கெடுத்துக் கொண்டான். ஆனால் அந்த ஊரைப் பற்றி அவன் பொய்ப் பிரசாரம் செய்து வருவதால் அங்கே எந்த அதிகாரியும் பொறுப் பேற்கத் துணியவில்லை. நீ நான்கு வருடங்களுக்கு அந்த ஊரின் நிர்வாக அதிகாரியாகப் பணி புரி'' என்றான்.

பரதன் மிகவும் கெட்டிக்காரன். அவனுக்குப் பதவி ஆசையும் இல்லை. மன்னனின் வற்புறுத்தலின் பேரில் வித்தியா நகரின் நிர்வாக அதிகாரியாகப் பொறுப்பு ஏற்றான். வித்தியா நகர் அவனது நிர்வாகத்தில் நல்ல முன்னேற்றம் கண்டது. ரகுராமனுக்கும் பரதனுக்கும் சுமுகமான உறவே இருந்து வந்தது.

மூன்று ஆண்டுகள் கழிந்ததும் மன்னன் பரதனை அழைத்து ''உன் நியமனம் முடிய ஒரு வருடமே உள்ளது. அதற்குப் பிறகு உன்னை அந்த ஊரிலிருந்து வேறு இடத்திற்கு மாற்ற வேண்டும். உனக்குப் பின் அங்கு யாரை நியமிக்கலாம் என்று நீயே சொல்'' என்றான். பரதனோ ''ஏன் இன்னொருவரை நியமிக்க வேண்டும்? நானே தொடர்ந்து அவ்வூரின் நிர்வாக அதிகாரியாக இருந்து விடுகிறேன்'' என்றான்.

மன்னனோ ''முடியாது. நான்கு ஆண்டுகளான பின் ஒரு அதிகாரியை நான் வேறு இடத்திற்கு மாற்றியே ஆக வேண்டும். அதுதான் என் சட்டம். நீ அந்த ஊரில் இருந்து பதவியின் ருசி கண்டு அங்கேயே நிலைத்து இருக்



கவா விரும்புகிறாய்?'' என்று கேட்டான்.

பரதனும் ''அரசே! எனக்குப் பதவி ஆசை இல்லை. மேலும் இப்பதவியை நீங்களாக என்னைக் கூப்பிட்டுக் கொடுத்தீர்கள். என் நிர்வாகத்தில் வித்தியா நகரம் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளது. அந்த ஊராரும் என்னை மிகவும் விரும்புகிறார்கள். எனக்கும் அந்த ஊர் பிடித்துப் போயிற்று. எனக்கு எதிராக ஒரு புகார்கூடக் கிடையாது. இந்நிலையில் என்னை ஏன் மாற்ற வேண்டும்?'' என்று கேட்டான்.

மன்னனோ ''நீ என்ன சொன்னாலும் கேட்க மாட்டேன். என் சட்டம் இதுதான்'' எனவே பரதனும் ''நீங்கள் இந்த சட்டத்தை மாற்றிக் கொள்ள வேண்டிய நிலை கூட ஏற்படலாம்



என்னோடு பேசுவது கூட இல்லை. நான் மக்களின் பிரதிநிதி என்று கூட எண்ணாமல் என்னை மதிக்காமல் நடக்கிறான். எனவே அவனைப் பதவியிலிருந்து நீக்கி விடுங்கள்'' என்று கேட்டுக் கொண்டான்.

மன்னன் ரகுராமனின் புகார் பற்றி பரதனிடம் விளக்கம் கேட்கவே அவனும் ''இந்த ரகுராமன் ஊராரின் தலைவன் என்ற நினைப்பில் தலைகால் தெரியாமல் துள்ளுகிறான். அவன் என்னை மதிக்கவில்லை. அதனால் நானும் அவனை மதிக்கவில்லை. இது தனிப்பட்ட முறையில் ஏற்பட்ட விவகாரம். இவனைத் தவிர அந்த ஊரில் யாராவது புகார் என் மீது கூறியுள்ளார்களா? அப்படி யாராவது புகார் கொடுத்திருந்தால் நான் இப்போதே என் பதவியை விட்டு விலகி விடுகிறேன்'' என்று விளக்கம் அளித்தான்.

மன்னன் அது விஷயமாக முழு விசாரணை நடத்தி ரகுராமன் பரதன் மீது தனிப்பட்ட மனஸ்தாபம் கொண்டே பரதன் மீது புகார் செய்ததாகத் தெரிந்து கொண்டான். அவன் அவ்விருவரிடமும் ''நீங்கள் இருவரும் மிகவும் நல்லவர்கள். படித்தவர்கள். அறிவாளிகள். உங்கள் தனிப்பட்ட விவகாரங்களை நீங்களே பேசித் தீர்த்துக் கொள்ளுங்கள். ஊருக்கு இந்தத் தனிப்பட்ட விவகாரத்தால் கெடுதல் செய்ய நினைக்காதீர்கள்'' என்றான்.

அப்போது பரதன் ''தப்பு எங்கள் இருவர் பேரிலும் உள்ளது. நான் என் தவறைத் திருத்திக் கொள்கிறேன். இனிமேல் நான் இம்மாதிரி தவறு செய்ய மாட்டேன்'' என்றான். ரகு

என்றான். மன்னனோ ''அது ஒருக்காலும் நடக்காது'' எனவே பரதனும் விடைபெற்றுக் கொண்டு வித்தியா நகரை அடைந்தான்.

அப்போது முதல் பரதனின் நடத்தையிலே ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவன் ரகுராமனிடம் மட்டும் தன் அதிகார தோரணையைக் காட்டலானான். ஆனால் ஊரில் மற்றவர்களிடம் சுமுகமாகப் பழகி அவர்களுக்கு நன்மைகள் செய்து வரலானான்.

பரதன் தொல்லை கொடுப்பது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போவது கண்டு ரகுராமன் இனியும் பொறுத்துக் கொள்ளக் கூடாது என எண்ணித் தலைநகருக்குப் போய் மன்னனைக் கண்டான். அவன் ''பரதன் வேண்டுமென்றே எனக்குத் தொல்லைகளைக் கொடுக்கிறான்.

ராமனும் அதுபோலவே வாக்குறுதியை அளித்தான். மன்னனும் பரதனை அதே ஊரின் நிர்வாக அதிகாரியாகத் தொடர்ந்து இருக்கும்படியும் அவனை இனி மாற்றப் போவதில்லை என்றும் கூறிவிட்டுத் தலைநகருக்குத் திரும்பி வந்தான்.

மன்னனின் முடிவைக் கேட்ட அமைச்சர் "நான்கு ஆண்டுகளுக்குப் பின் ஒரு அதிகாரியை இட மாற்றம் செய்யும் சட்டத்தைக் கைவிட்டு விட்டீர்களா?" என்று கேட்டார். மன்னன் "நாகேந்திரனைப் போல பரதன் ஊராருக்கு எதிராக எதுவும் செய்யவில்லை. பரதன் பதவி வெறி பிடித்தவன் அல்ல. நான்தான் அவனுக்கு அப்பதவியைக் கொடுத்தேன். அவன் ஊரின் நலனையே முக்கியமாகக் கருதுபவன் என்பதை எனக்கு உணர்த்தவே தனிப்பட்ட முறையில் ரகுராமனுக்குத் தொல்லைகளைக் கொடுத்து அவனைப் புகார் செய்யும் நிலைக்குத் தள்ளினான். இதிலிருந்து நான் கற்ற பாடம் ஊருக்கு நன்மை புரியும் அதிகாரியை அநாவசியமாக இடமாற்றம் செய்யக்கூடாது என்பதுதான். எல்லா அதிகாரிகளும் நாகேந்திரனைப் போல இருக்க மாட்டார்கள் என்றும் தலைகால் தெரியாமல் துள்ளவும் மாட்டார்கள் என்றும் தெரிந்து கொண்டேன். மேலும் பரதனைப் போலவும் அதிகாரிகள் இருக்கிறார்கள் என்றும் மக்கள் அவர்களை விரும்புகிறார்கள் என்றும் புரிந்து கொண்டேன். இப்படிப்பட்ட அதிகாரிகளைக் காரணமில்லாமல் இட மாற்றம் செய்வது முறையல்ல என்பதை அறிந்தேன். அதனால் நான் இயற்றிய நான்கு வருடத்திற்குப் பின் அதிகாரிகளைக் கண்டிப்பாக மாற்ற வேண்டுமென்ற சட்டம் எவ்வளவு அர்த்தமில்லாதது என்பது எனக்கு விளங்கி விட்டது. அதனால் ஊருக்கு நன்மைகள் புரிந்து ஊராரின் நன்மதிப்பைப் பெற்ற பரதனை நிர்வாக அதிகாரியாக அதே ஊரில் நிரந்தரமாக இருக்கும்படி உத்தரவிட்டேன்" என்றான்.

அமைச்சரும் "இதில் பரதனையும் ரகுராமனையும் விடத் தாங்களே மிக புத்திசாலித்தனமாக நடந்து முடிவு எடுத்திருக்கிறீர்கள் என்பதை நினைத்துப் பெருமிதம் கொள்கிறேன்" என்றார் பணிவுடன்.






# அதுவே என் விருப்பம்

சொர்ணபுரியில் சோமநாதன் என்ற ஏழை இருந்தான். அவனுக்கு உற்றார் உறவினர் என்று யாருமே இல்லை. ஏழையான அவன் அவ்வூர் பெருமாள் கோவிலிலேயே இருந்து கிடைக்கும் பிரசாதத்தை உண்டு வாழ்நாளைக்கழிக்கலானான். அவன் உடலோ கட்டு மஸ்தாக இருந்து பார்ப்பதற்கு அழகாகவும் இருந்தான்.

ஒருநாள் சோமநாதனின் கனவில் லட்சுமி தேவி தோன்றி ''அப்பனே! உனக்கு நான் அருள்புரியப் போகிறேன். உன்னுடைனேயே இருந்து எல்லாஐஸ்வரியங்களையும்அளித்து வருவேன்'' என்றாள்.

அதுகேட்டு சோமநாதன் அவளை பணிவுடன்வணங்கி ''தாயே! எனக்கு எந்த ஐஸ்வர்யமும் வேண்டாம். என்னை இப்படியே இருக்க விடுங்கள். இப்போது எந்தக் கவலையும் இல்லாமல் இருக்கிறேன். பணம் இருந்தால்எப்போதும்கவலைதான்'' என்றான்.

லட்சுமிதேவி கோபத்தோடு ''அட முட்டாளே! என்னையா புறக்கணிக்கிறாய்? உன்னை நான் விட மாட்டேன். உன்கூடவேதான்இருப்பேன். உனக்கு ஐஸ்வரியத்தைக் கொடுத்துக் கொண்டே இருப்பேன்'' என்றாள். சோமதேவனும் ''சரிதான். இது என் விதி. அனுபவிக்கிறேன். ஆனால் நீ என்னை விட்டுப் போகுமுன் எனக்குத் தெரிவித்து விட்டே போக வேண்டும்'' என வேண்டினான். லட்சுமி தேவியும்தான்போகும்போது என்ன அறிகுறி இருக்கும் என்று தெரியப் படுத்தி விட்டு மறைந்தாள்.

மறுநாள்யாரோஒரு கோடீஸ்வரர் அக்கோவிலில்சிறப்புப்பூஜை செய்ய வந்தார். அவர்சோமதேவனைப்பார்த்ததும் வணங்கி அவனுக்கு மாலை போட்டுபட்டாடைகளைக்கொடுத்து உடுத்தி வரச் சொன்னார். அவன்

—காரை. குருமூர்த்தி—

பட்டாடை உடுத்திக் கொண்டு வந்ததும் அந்தக் கோடீஸ்வரரோடு வந்த பலரும் அவனுக்கு மாலைகளைப் போட்டார்கள். அன்று அவனுக்கு நல்ல விருந்து சாப்பாடு வேறு கிடைத்தது. இதெல்லாம் லட்சுமி தேவியின் தயவால்தான் என்று அவன் புரிந்து கொண்டான்.

கோடீஸ்வரர் சோமதேவனைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். சோமதேவனை அந்தக் கோடீஸ்வரர் அங்கும் இங்கும் நகர விடவில்லை. எப்படியோ ஒருவிதமாக அவரிடம் விடை பெற்றுக் கொண்டு சோமதேவன் வெளியே வந்து விட்டான்.

அங்கிருந்து அவன் மன்னனின் கோட்டையை நோக்கிச் சென்றான். பட்டாடை உடுத்து மாலைகள் அணிந்து வந்த அவனை கோட்டை காவலாளிகள் விஷ்ணு பகவான் என நினைத்து மரியாதை செய்து உள்ளே போகச் சொன்னார்கள்.

சோமதேவன் அரண்மனைக்குள் போனபோது யாருமே அவனைத் தடுக்கவில்லை. அவன் பல அறைகளைக் கடந்து மன்னனும் அரசியும் படுத்திருந்த படுக்கையறைக்குள் சென்றான். அங்கு சட்டென அரசியின் கையைப் பிடித்து இழுத்து கட்டிலிலிருந்து சற்று தூரம் கொண்டு போனான். அரசி உரக்கக் கத்த மன்னனும் கட்டிலிலிருந்து குதித்து சோமதேவனைத் தாக்க ஓடினான். அப்போது கூரையிலிருந்து ஒரு நாகப் பாம்பு அவன் படுத்திருந்த கட்டிலின் மீது வந்து விழுந்தது. மன்னன் உடனே தன் வாளால் அந்தப் பாம்பை வெட்டிக் கொன்றான்.



பிறகு மன்னன் சோமதேவனைப் பார்த்து ''ஐயா! தாங்கள் யாரோ? சாட்சாத் மகாவிஷ்ணு போல வந்து எங்கள் இருவரையும் காப்பாற்றினீர்களே. இதற்கு நாங்கள் உங்களுக்கு மிகவும் கடன்பட்டிருக்கிறோம்'' என்றான்.

அவனும் ''என் பெயர் சோமதேவன். நான் மகாவிஷ்ணு இல்லை. உங்கள் இருவரின் உயிர்களை காப்பாற்ற முடிந்ததே என்று மகிழ்ச்சி அடைகிறேன்'' என்றான். மன்னன் அவனைப் பாராட்டி அவன் வசிக்க ஒரு மாளிகையையும் கொடுத்தான். இதுவும் லட்சுமி தேவியின் மகிமையால்தான் என்று சோமதேவன் உணர்ந்து கொண்டான்.

சோமதேவனின் மதிப்பு உயர்ந்து விட்டது. மன்னனின் ஆதரவு அவனுக்கு இருந்தது. அரண்மனை

யிலுள்ள அனைவரும் அவனுக்கு மரியாதை செலுத்தினார்கள். யாரோ ஒரு பணக்காரர் தன் மகளையும் அவனுக்கு விவாகம் செய்து வைத்து விட்டார். அவனுக்கு நான்கு குழந்தைகளும் பிறந்தன.

லட்சுமி தேவி இருக்க சோம தேவன் ஒரு பெரிய இரும்புப் பெட்டியும் செய்து வைத்தான். லட்சுமி தேவியும் அதில் இருந்து வரலானாள். இப்படியாகப் பனிரெண்டு ஆண்டுகள் கழிந்தன.

ஒரு வெள்ளிக் கிழமையன்று மாலை சோமதேவனின் மனைவி விளக்கை ஏற்ற முயன்று முடியாது போகவே ''ஐயோ! இதென்ன! விளக்கு எரியவில்லையே'' என்று உரக்கக் கூவினாள். அப்போது சோம தேவன் லட்சுமி தேவியை மனதிற்குள் வணங்கி ''தேவி! நீ போய் வருகிறாயா? தாராளமாகப் போகலாம்'' என்று தனக்குள் கூறினான்.

பிறகு அவன் இரும்புப் பெட்டியை திறந்து தன் மனைவியிடம் ''இப்போது நீ என்னிடம் எதையும் கேட்காதே. இருப்பதை எல்லாம் எடுத்துக் கொண்டு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு உன் பிறந்த வீட்டிற்குப் போய் விடு'' என்று கூறி எல்லோரையும் அப்போதே வண்டியில் ஏற்றி அனுப்பி விட்டான்.

மன்னன் வேட்டையாடப் போகும் போதெல்லாம் தன்னுடன் சோம தேவனையும் அழைத்துச் செல்வது வழக்கம். சோமதேவன் தன் மனைவி மக்களை வீட்டிலிருந்து அனுப்பிய மறுநாளே மன்னன் வேட்டையாடக் கிளம்பினான். வழக்கம் போல சோம தேவனையும் அவன் தன் கூட அழைத்துச் சென்றான். உச்சி வேளை வரை காட்டில் அலைந்து களைத்துப் போய் யாவரும் மரங்களின் நிழல்களில் படுத்து இளைப்பாறலானார்கள்.

மன்னன் சோமதேவனின் தொடை



மீது தலையை வைத்துப் படுத்துத் தூங்லானான். அப்போது ஒரு காகம் மன்னனின் தலை மீது எச்சமிட்டு விட்டது. மன்னன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்ததால் கண் விழித்து எழவில்லை. மன்னனின் தலை மீது விழுந்த எச்சத்தை எடுக்க ஏதாவது குச்சி கிடைக்குமா என்று சோமதேவன் சுற்றிலும் பார்த்தான். எதுவுமே கிடைக்கவில்லை. மன்னனின் இடையில் உறைக்குள் சிறிய குத்து வாள் இருந்தது.

சோமதேவன் அந்த வாளை உருவி எடுத்து மன்னனின் தலை மீது விழுந்த எச்சத்தை அகற்றப் போனான். அப்போது கண் விழித்த மன்னன் சோமதேவன் கத்தியை தன் கழுத்துப் பக்கம் கொண்டு போவது கண்டு ''துரோகி! என்னைக் கொல்லப் பார்க்கிறாயா? வீரர்களே! இவனைப் பிடித்து நகருக்குக் கொண்டு வாருங்கள்'' என்று கட்டளை இட்டான்.

மறுநாள் மன்னன் விசாரணை நடத்தி சோமதேவனுக்குத் தூக்கு தண்டனை விதித்தான். பிறகு அவன் ''இறக்கு முன் நீ விரும்புவது என்ன?'' என்று கேட்டான். சோமதேவனும் ''என் வீட்டு இரும்புப் பெட்டியில் ஒரு ஓலைப் பெட்டி உள்ளது. அதை எடுத்து வரச் சொல்லுங்கள். அதை ஒருமுறை நான் பார்த்துவிட்டு உயிர் விடுகிறேன்'' என்றான்.

மன்னனின் கட்டளையின் பேரில் சோமதேவனின் வீட்டிலிருந்து இரும்புப் பெட்டியிலிருந்த ஓலைப் பெட்டியை எடுத்து வந்தார்கள். சோமதேவன் அதைத் திறந்து ''இவற்றைத்தான் நான் பார்க்க விரும்பியது'' என்றான். மன்னனும் அவற்றைப் பார்த்தான். அவை ஒரு காவி வேட்டியும் ஒரு பித்தளைச் சொம்புமாகும்.

மன்னனும் ''இவற்றைக் காண்பதா உன் விருப்பம்?'' என்று கேட்கவே சோமதேவனும் ''ஆம். இவற்றை நம்பி இருந்த வரை எனக்கு ஒரு கவலையும் இருக்கவில்லை. ஆனால் லட்சுமி தேவியின் பார்வை என் மீது விழுந்த போது அந்த வாழ்வு நிலைக்காது என நினைத்து இவற்றை பத்திரப்படுத்தி வைத்தேன். இவற்றோடு போக என்னை அனுமதியுங்கள்.'' எனவே மன்னன் ஆச்சரியப்பட்டு அவன் விருப்பப்படியே போக அனுமதித்தான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 நவம்பர் மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. Seshagiri



Mahantesh C. Morabad

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ செப்டம்பர் 20–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

---

## ஜூலை மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **நாரை முறுக்குவது கயிற்றுக்காக.**

இரண்டாவது போட்டோ : **நாங்கள் உழைப்பது வயிற்றுக்காக.**

பரிசு பெற்றவர் : **திரு கே.எஸ். பொன்னுசாமி, உடுமலைப்பேட்டை.**

---




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

PARLE

# என்றும் மறவோம்... வாழ்நாள் வரை



## வாழ்க்கைப் பாதை இதுவே சரி

வாழ்க்கைப் பாதையில் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் ஒரு சோதனையே. எந்தப் பாதையில் செல்வது, எதைத் தவிர்ப்பது: நம்மை வேறுபடுத்தும் அடையாளம் இதுவன்றோ. ஒருவித சுயநலமின்றி எதிர்பார்ப்பின்றி, பிறருக்கு உதவுதல், பாதையில் செல்கையில், மற்றவர்களின் துயர் நீக்குதல். உண்மையான வாழ்க்கை என்பது இதுதானே. என்றும் மறவோம்... வாழ்நாள் வரை. வாழ்க்கைப் பாதை இதுவே சரி.

வருடக்கணக்காக இந்தியாவின் அனைத்திலும் அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட்




• சுவை மிகுந்தது, உண்மையான சக்தி நிறைந்தது •

everest/95/PPL/110tm